# செந்தமிழ்த் தொண்டர்கள்

க. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

இ. மு. ஆறுமுக செட்டியார்
தலைமைத் தமிழ் ஆசிரியர்
தியாகராஜா கல்லூரிப்பள்ளி, சென்னை.

அஜந்தா பப்ளிஷர்ஸ்
புத்தக வெளியிடுவோர் & விற்பனையாளர்

தலைமை அலுவலகம் :
4, கொண்டி செட்டி தெரு,
சென்னை-1

கிளை அலுவலகம் :
120, திண்டுக்கல் ரோடு,
மதுரை.

பதிப்புரிமை] 1957 [விலை அணா 14
நயா பைசா 87

[illegible]. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# முன்னுரை

பல நூல்களின் ஆராய்ச்சியின் பயன் இந்நூல். இதனை ஆராய்ச்சி நூலாக எழுதின் படிக்கும் மாணவர்க்கு அலுப்புண்டாகும்; அதனால், வரலாறாக எழுதப்பட்டது. இதில் கூறப்படும் பெரியோர்கள் தமிழ்த் தியாகிகள். இவர்களது வரலாறு மாணவர்களுக்குத் தமிழ்ப் பற்றை உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. என் குறிக்கோளும் மாணவர்களுக்குத் தமிழ்ப் பற்றை உண்டாக்க வேண்டும் என்பதே. திரு. **ஔவை துரைசாமிப் பிள்ளை** அவர்கள், திரு. **மு. இராகவையங்கார்** அவர்கள் ஆகிய இரு பெருந் தமிழ்ப் புலவர்களின் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் எனக்கு உதவி செய்தன. அவர்கட்கு என் நன்றி உரியது. என் பல நூல்களை ஆதரித்த தமிழுலகம் இச்சிறு நூலையும் ஆதரிக்கும். அதற்கு என் வணக்கம்.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| எண் | பொருள் | பக்கம் |
| --- | --- | --- |
| 1 | செட்டிப்பிள்ளையப்பன் | .... 1 |
| 2 | வாயற்பதி வடுகன் | .... 8 |
| 3 | சோமன் | ... 20 |
| 4 | சம்பந்தச் சர்க்கரை | ... 32 |
| 5 | தஞ்சைவாணன் | ... 43 |
| 6 | நந்தி வர்மன் | ... 55 |
| 7 | பரராச சிங்கன் | ... 74 |
| 8 | சந்திர வாணன் | ... 86 |
| 9 | அதிவீரராம பாண்டியர் | ... 95 |

# 1. செட்டிப்பிள்ளையப்பன்

[கொங்கு மண்டலசதகம், பெருந்தொகை என்னும் நூல்களைத் தழுவி இவ்வரலாறு புனைந்துரைக்கப்பட்டது.]

## புலவர்க்காகப் புலிக்குகையுள் நுழைந்தான்.

கோயம்புத்தூர் மாவட்டமும் அதனைச்சார்ந்த நிலப் பகுதியும் முற்காலத்தில் கொங்கு நாடு என்று கூறப் பட்டன. கொங்கு நாட்டிலுள்ள கோபிச்செட்டிப்பாளை யத்தைச் சார்ந்தது பாரியூர். பாரி வள்ளலின் திருப் பெயரைத் தமிழ் மக்கள் மறவாதிருக்க அப்பெயர் இட்ட னர் போலும்! அவ்வூரில் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டில் புலவர்க்காக வாழ்ந்தவன் செட்டிப்பிள்ளை யப்பன். அவனது குலம் கணவாள குலம். 'வடகரை யான்,' 'வலியன்,' 'கணவாளன்' என்று புலவர்களால் அவன் சிறப்பிக்கப்படுகிருன்.

மணி முடி மன்னர்கள் அறிய வாழ்ந்த பெருஞ் செல்வன் அவன். புலவர்கள் போற்ற வாழ்ந்த புகழுடை யோன் அவன். அவனிடத்தில் பல நற்பண்புகள் தழைத்திருந்தன. அவற்றுட்சிறந்தது அவன் புலவர் களைப் போற்றியது. 'புலவர் யாராயினும் அவர் கேட்பதைக் கொடுக்க வேண்டும்,' என்று அவன் உறுதி கொண்டு உதவி வந்தான். தமிழ்ப் புலவர்களே அவன் கண் கண்ட தெய்வங்கள். இன்சொற்களே அத்தெய்வங்களை அவன் அர்ச்சித்த மந்திரங்கள். அன்பு நீரால் அவன் அத்தெய்வங்களை அபிடேகம் செய்தான்.

புலவர்களை அவன் எதிர்கொண்டழைத்து, ஆசனத்தில் எழுந்தருளச் செய்து, வணங்கிக் குறிப்பறிந்து கொடுத்து இன்புற்றான். பிச்சைக்காரர்கள் கூட்டம் கூட்டமாக அவனது மாளிகைக்குச் சென்ற வண்ணம் இருப்பார்கள். அவர்கள் செந்தமிழ்ப் பாடல்களைப் பிழையாகப் பாடுவார்களாயின், அவனது உள்ளம் துடிக்கும். பிழையாகப் பாடினவரைச் செட்டிப்பிள்ளையப்பன், புலவரிடம் அனுப்பித் திருத்தமாகப் பாடக் கற்றுக் கொடுத்தான். பிச்சைக்காரர்கள் பிழை இன்றிப் பாடக் கற்றுக்கொடுக்க அவன் ஒரு பள்ளிக்கூடம் வைத்திருந்தான். அதில் படித்தவர்களுக்கு எல்லா வசதிகளையும் செட்டிப்பிள்ளையப்பன் செய்து மகிழ்ந்தான். அமிழ்தினும் மிகுந்தது தமிழின்பம். அமிழ்து உண்ட உடன் சீரணித்துவிடும். தமிழ் நீண்ட நாளைக்கு நிலைத்த இன்பம் தரும்.

செட்டிப்பிள்ளையப்பன் தனக்கிருந்த ஆடு மாடுகளையும் நன்செய் புன்செய்களையும் புலவர்களுக்குக் கொடுத்தான்; வீட்டையும் விற்று அவர்களுக்குப் பரிசு கொடுத்தான். வறுமை அவனோடு நட்புக்கொண்டது. ஒரு நாள் ஒரு வேளைக் கஞ்சிக்கும் அவனது குச்சு வீட்டில் நொய்கூட இல்லை. ஓட்டை உடைச்சலான இரண்டொரு மட்பாண்டங்கள் மட்டும் மூலையிற் கிடந்தன. ஈக்கள் அவற்றுட்சென்று ஏங்கி வெளியேறின. குடிசையிலிருந்த எறும்புகள் எல்லாம் வேறிடம் குடி ஏறின. தமிழ்த்தெய்வம், செட்டிப்பிள்ளையப்பனது தமிழன்பினைக்காட்ட அவனுக்கு வறுமை தந்தது போலும்! பிள்ளையப்பன் மிக வருந்தி, "இன்று புலவர்கள்

என்னைத் தேடி வருவார்கள். வந்தால் என்ன பயன்? இல்லை என்று அன்றோ யான் கூற வேண்டும்! நம்பி வருபவர்க்கு இல்லை என்று சொல்வது கொடிது கொடிது! நெருப்பினும் கொடிது! இல்லை என்னும் கொடுஞ்சொல் சொல்வதைவிட நான் இறப்பது இனிது. நான் இங்கு இறப்பேனாயின், இவ்வுடலை எரியிலிட்டு எரிப்பர். அதனால், பிற உயிர்களுக்கு என்ன பயன்? நான் புலிக்குகையுள் நுழைந்து உயிர் துறப்பேன். நான் புலிக்குகையுள் நுழைந்தால், புலி என்னைக் கொல்லும். கொன்றால், எனக்கின்பம் உண்டாம். இவ்வுடலைப் புலி தின்றால் அதற்கின்பம் உண்டு. அது என்னைத் தின்று இன்புறட்டும்," என்று அவன் காட்டை நோக்கிச் சென்றான். பிற உயிர்கள் இன்புற உயிர் துறப்பது சான்றோர் இயல்பு.

ஒரு பெரிய காடு—அதனுள் முள்ளம்பன்றியின் முள்போல முள் அடர்ந்த முட்புதர்கள் – உயர்ந்த பழுத்த மரங்கள் – படர்ந்து மலர்ந்த செடிகள் – அக்காட்டினுட் சென்றான் செட்டிப்பிள்ளையப்பன். சுழல் காற்று, முட்புதர்களை விலக்கி அவனுக்கு வழி செய்தது. இளந் தென்றல், மலர்களின் மணத்தை வாரிக்கொண்டு போய் அவன்மீது வீசிற்று. மரங்கள் மலர் மழை பெய்தன. வண்டுகள் பாடி அவனை மகிழ்வித்தன. பறவைகள் பழங்களைப் பறித்து அவனெதிரில் எறிந்தன. மலர்களின் தேனும் பழங்களின் சாறும் அவனுடைய கால்களுக்குக் குளிர்ச்சியைத் தந்தன. அதனால், மண் கொதிப்பு

அவனுக்குத் தோன்றவே இல்லை. மரங்கள் குடை பிடித்ததால் வெயிலின் வெப்பம் அவனுக்குத் தெரியவில்லை.

செட்டிப்பிள்ளையப்பன் அக்காட்டினுட்புகுந்து புலிக்குகையைத் தேடினான்; அலைந்தான்; காணாமையால் வருந்தினான்; இறுதியில் ஒரு புலிக்குகையைக் கண்டான்; மகிழ்ந்தான். அப்புலிக்குகை சுரங்கம் போல இருள் சூழ்ந்திருந்தது.

பிள்ளையப்பன் அக்குகையினுள் உற்று நோக்கினான். அதனுள்ளிருந்தது அவனுக்கு நன்கு தெரியவில்லை. 'அதோ தெரிவது புலிதான். அக்குகையினுட்சென்றதும் புலி என்னைக் கொன்று பசியாறும்," என்று அவன் நகர்ந்தபடியே குகையினுட்சிறிது தொலைவு சென்றான். "இன்னும் புலி ஏன் என்மீது பாயவில்லை! அது தூங்குகிறதோ! அதனை எழுப்பிப் பார்க்கலாம்," என்று பிள்ளையப்பன் கனைத்தான். ஆனால், அவன் எண்ணியவாறு புலி அவன்மீது பாயவில்லை.

மேலும் சிறிது தொலைவு அவன் நகர்ந்து சென்று அங்கிருந்ததைத் தட்டினான். தமிழோசை கேட்ட அவனுடைய அருஞ்செவிகளில் கணீரென்று வெண்கல ஓசை கேட்டது. அவன் திடுக்கிட்டுத் திகைப்புற்று அதனைத் தடவிப் பார்த்து, "இது என்ன! வெண்கலத் தவலை போலத் தோன்றுகிறதே! இருட்டில் ஒன்றுமே தெரியவில்லையே! இப்போது நானிருப்பது கனவிலா நனவிலா!" என்று அதனைத் தூக்கிக்கொண்டு வெளியில் வந்து பார்த்தான். அது ஒரு தவலையே.

பிள்ளையப்பன் திடுக்கிட்டு அதனைத் திறந்து பார்த்தான். வெண்பொற்காசுகளும் செம்பொற்காசுகளும் அதனுள் நிறைந்திருந்தன. "இது மாயமோ, அன்றி என் மயக்கமோ!" என்று பிள்ளையப்பன் மயங்கிச் சிறிது நேரம் இருந்தான்; பின்பு அவன் தெளிவுற்று மறுபடியும் குகையினுட்சென்றான். அங்கொரு பை இருந்தது. அதனையும் அவன் வெளியே எடுத்துக் கொண்டு வந்து திறந்து பார்த்தான். அப்பை நிறையப் பொன் வெள்ளி நகைகள் இருந்தன. அவன் அவற்றைக் கண்டு, "இவற்றை இங்குக் கொண்டு வந்து வைத்தவர் யார்? திருடர்கள் கொண்டுவந்து வைத்திருக்கலாமோ! அன்றிச் செல்வர்கள் கொண்டு வந்து ஒளித்து வைத்தனரோ! இதோ தெரியும் சுவடுகள் மக்களுடைய அடிகள். புலியின் அடி இங்கொன்றுமே இல்லை. (சிறிது அவன் சிந்தனையில் ஆழ்ந்து) "சீச்சீ! நான் இவ்வாறெல்லாம் ஏன் நினைக்க வேண்டும்? தமிழ்த் தெய்வம் தனக்குத் தொண்டு செய்யக் கொடுத்தது." என்று செட்டிப்பிள்ளையப்பன் தவலையையும் பையையும் எடுத்துக் கொண்டு தன் பாரியூர் நோக்கிச் சென்றான். **"ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்."**

அவன் சென்ற பின் திருடர் அக்குகையினுட் சென்று கண்டு திடுக்கிட்டனர். குதிரை வால் போன்ற அவர்களுடைய மீசைகள் துடித்தன; கண்கள் சிவந்தன. நண்டின் வளை போன்ற அவர்களுடைய மூக்குத்

துவாரங்களிலிருந்து நெருப்பென பெருமூச்சு வந்தது. அவர்களுள் ஒருவன் சினந்து, "எவனோ ஒருவன் நம் பெரும் பொருளைத் திருடிக் கொண்டு போய் விட்டான். திருடரிடத்தில் திருடியவன் பெரிய திருடனாக இருக்க வேண்டும். நாம் இனி இங்கே வாழ முடியாது. நம் இடத்தை மாற்றிக்கொண்டால் பிழைப்போம்," என்றான். மற்றவர்களும் அதற்கு உடன்பட்டுத் தங்கள் மறைவிடத்தை மாற்றிக்கொண்டு சென்றுவிட்டார்கள். ஆயினும், அவர்கள் மறைந்த பொருளை நினைந்து கண்ணீர் விட்டுக் கதறினார்கள். பொருளின் இயல்பு போய்க் கொண்டிருப்பதுதான்.

பொருளை எடுத்துச்சென்ற பிள்ளையப்பனை இன்பமும் துன்பமும் இழுத்து இழுத்து அலைத்தன. "இப் பொருளுக்கு உரியார் யாரோ! இதனை இழந்தவர் மனம் எவ்வாறு துன்புறுமோ!" என்று அவன் துன்புற்றான். "புலிக்குகையில் பொருளை மறைத்து வைத்தவர்கள் கீழ்மக்களாகத்தான் இருப்பர்; அன்றித் திருடராயிருப்பர். அத்தகையோர் பொருள் நாட்டுக்குப் பயன்படும்; கலையை வளர்க்கும்; இன்பத்தைத்தரும்; அறிவை வளர்க்கும் புலவர்களுக்குப் பயன்படுத்துவதில் குற்றமில்லை," என்று அவன் இன்புற்றான்.

செட்டிப்பிள்ளையப்பன் பாரியூரிலுள்ள தன் இல்லத்தை அடைந்து, தன்னை விரும்பி வந்த புலவர்களுக்கும் வாராமலிருந்த புலவர்களுக்கும் பொருளைக் கொடுத்து மகிழ்ந்தான். அவனது அறிவு புலமையில்

புரண்டது ; வாழ்வு, இன்பத்தில் தவழ்ந்தது ; உள்ளம், புலவரிடத்துப் பொருந்தியது.

"இட்ட மான கவிசொல்லும் பாவலர்க்
    கில்லை யென்று சொலற்கஞ்சிக் காட்டில்வாழ்
துட்ட வன்புலித் தூற்றிற் புகுந்தவன்
    தூய வன்கண வாள குலத்தினன்
செட்டிப் பிள்ளையைப் பன்றினந் தொண்டுசெய்
    தேவி மாமலை மாதொரு பங்குள
கட்டு செஞ்சடை யமர விடங்கனூர்
    கதித்து வாழ்பாரி பூரெங்க ளூரரோ"

(கொங்குமண்டல சதகம்)

# 2. வாயற்பதி வடுகன்

[தொண்டைமண்டல சதகம், தமிழ் நாவலர் சரிதை—என்னும் நூல்களைத் தழுவி இவ்வரலாறு எழுதப்பட்டது.]

## பிணத்தை மறைத்துப் புலவர்க்கு விருந்து.

வாயற்பதி என்பது தொண்டை நாட்டில் உள்ள ஓரூர். செந்தலங்கை என்றும் அதற்கு மற்றொரு பெயருண்டு. ஆறுகள் இருப்பன போலப் பல தெருக்கள் அவ்வூரில் உண்டு. செல்வமும் பயிர்களும் அவ்வூரை அழகு செய்யும். ஒவ்வொரு வீடுகளிலும் சூரியனும் தென்றலும் சேர்ந்து விளையாடும்.

அந்த வாயற்பதியில் வடுகன் என்னும் பெருஞ் செல்வன் இருந்தான். அவனுக்கு வடுகநாதன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அவனுக்குக் கணக்கில்லா ஆடுமாடுகளும் நிலங்களும் இருந்தன. மழைக்காலக் காவிரி போல அவனுக்குச் செல்வம் பெருகிற்று. செல்வத்திற்கு அவன் அடிமையாகாமல் தனக்குச் செல்வத்தை அடிமையாக்கினான்.

அவனுக்குக் கல்வியோடு அறிவும் வளர்ந்தது. அறிவோடு தமிழ்ப் பக்தியும் வளர்ந்தது. எக்குலத்தவராயினும் எச்சமயத்தவராயினும் தமிழ் கற்றிருப்பாராயின் அவர்களே அவனுக்குத் தெய்வம். புலவர்களைக் கண்டால் உடனே அவர்களை அவன் வணங்கித் தன் செல்வமாளிகைக்கு அழைத்துச் சென்று அவர்களுக்கு உள்ள குறைகளைப் போக்குவான்.

அவனது பெருஞ்சித்திரமாளிகையின் ஒரு பகுதியைத் தமிழுக்கென்று அவன் ஒதுக்கினான். செந்தமிழ்ச் சுவடிகளும், புலவர்களின் படங்களும் விக்கிரகங்களும் அப்பகுதியை அழகு செய்தன. வடுகநாதன் அந்த விக்கிரகங்களுக்குத் திருமஞ்னமாட்டி அருச்சனை செய்து தன்னை மறந்து உருகுவான். அவனைத் 'தமிழ்ப் பத்தன்' என்று உலகோர் போற்றினர்.

இராமனுக்குப் பரதன் இருந்தது போல வடுகநாதனுக்கு அன்புள்ள தம்பி ஒருவனிருந்தான். அவர்களுக்கு உடல் இரண்டு; உயிர் மட்டும் ஒன்று. வடுகநாதன் தம்பி நோயுற்றான். அந்நோயைத் தீர்க்க வடுகநாதன் பலவாறு முயன்றான். எருவிட்ட பயிர்போலாயிற்று அந்நோய். இறுதியில் வடுகநாதன் தம்பி விண்ணுலகு சென்றான். வடுகநாதன் கீழே விழுந்தான்; புரண்டான்; அலறினான்; கண்ணீர் சிந்தினான். அவன் சிந்திய கண்ணீரைத் தென்றல் துடைத்தது.

"தம்பி என்றால் நீதான் தம்பி. உன்னைப்போல் தம்பி உலகில் மற்றவர்க்குக் கிடைப்பானோ! நான் இல்லாத காலத்தில் புலவர்கள் வந்தால் நீ இன்மொழி கூறிப் பொருள் கொடுத்தனுப்புவாய். இனிவரும் புலவர்களை எதிர்கொண்டு அழைப்பார் யார்? புலவர்கள் எவ்வாறு வருந்திச் செல்வார்களோ! எமனுக்குத் தருமன் என்று பெயரிட்ட புலவர் யார்? அவன் அறக்கதிரை அறுத்துக்கொண்டு ஓடிவிட்டானே!" என்று வடுகன் வருந்தி, ஒருவாறு தெளிவுற்று, மாளிகையின் புறவாயிலை அடைந்தான். அம்மாளிகையில் நேர்ந்த மரணத்தை அறியாத புலவர் ஒருவர் அவனைக்கண்டு,

"புலவரைக் காக்கும் வள்ளலே, என்னைப் பசி வருத்துகின்றது," என்றார். அதனைக் கேட்ட வடுகன் மிக வருந்தி, "புலவரே, இங்குச் சற்று உட்காருங்கள். சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன்," என்று கூறித் தன் வீட்டினுட்சென்று, மாண்டு கிடந்த தம்பியை மறைத்து, அங்கு அழுதுகொண்டிருந்தவர்களை நோக்கி, ஒருவரும் அழாதீர். அழுதால், புலவர் உண்ணுமற்செல்வார். நீங்கள் அழுவதால் பயனில்லை. பயனுள்ளதைச் செய்ய வேண்டும். ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வரப்போவதில்லை," என்றான்.

அவர்கள் அழுகையை நிறுத்தி விம்மிக்கொண்டே மறு புறம் சென்றனர். வடுகநாதன் புலவரிடம் சென்று, "புலவரே, உண்ணுதற்கு எழுந்தருள்க," என்றான். புலவர் சென்றார். ஏவலர் சோறு கறி முதலானவற்றைக் கொண்டு வந்தனர். வடுகநாதனே தலை வாழையிலை விரித்து முப்பழங்கள், பலகாரங்கள், கறிகள் முதலானவற்றைப் பரிமாறி, "புலவரே, நீண்ட நேரம் உங்களைப் பசியோடு காக்க வைத்தேன். மன்னிக்க. நீங்கள் உணவை உண்டு பசியைப் போக்குங்கள்," என்று அவரை வணங்கினான்.

"நீ புலவருடன் இருந்து உண்பது வழக்கம் என்று நான் கேள்வியுறுகிறேன். அவ்வாறே இன்று நீ என்னுடனிருந்து உண்ணுக," என்றார் புலவர்.

"நீங்கள் காலமல்லாத காலத்தில் வந்தீர்கள் அதனால், உங்களுடன் இருந்து உண்ண முடியவில்லை. மன்னிக்க வேண்டும்," என்றான் வடுகன்.

" நேரமோ, இப்போது இருபது நாழிகை. நீ முன்னமே உண்டிருப்பாய்," என்று புலவர் அவ் வுணவை இறைவர்க்கு அர்ப்பணம் செய்து உண்ணத் தொடங்கினார்.

புலவர் உண்ணத் தொடங்கியதும் வெயிலின் கொடுமையாலும் வழி நடந்த களைப்பாலும் பசியின் மிகுதி யாலும் புலவரது உடல் வியர்த்தது. வெட்டிவேர் விசிறி யைத் தண்ணீரில் நனைத்து வீசினான் வடுகன். அப் போது அவன் தன் தம்பியை இழந்த துயரையும் மறந்து விட்டான். புலவர்க்குச் செய்யும் தொண்டு பெருந் துயரையும் போக்கும் போலும் !

புலவர் வயிறார உண்டார். பூவேலை அமைந்த பொன் தட்டில் தாம்பூலம் வந்தது. அதில் பொற்காசு களை வைத்துப் புலவரிடம் கொடுத்து வணங்கினான் வடுகநாதன். அவ்வேளையில், " அப்பா, அப்பா, நம் சின்ன அப்பா இறந்து விட்டாராமே! அவரை நீங்கள் எங்கேயோ மறைத்து வைத்துவிட்டீர்களாமே! அவரைக் காட்டுங்கள் !" என்று வடுகநாதன் மகள் (சிறுமி) ஓடி வந்து அவனது மடியில் விழுந்து ஓவென்று அழுதாள். வடுகநாதன் தனக்குண்டான துக்கத்தை மறைத்து, அவளது முகத்தைத் துடைத்து, ஒன்றும் சொல்லாமலிருந் தான்.

புலவர் திடுக்கிட்டு, "வடுகநாதனே, இக்குழந்தை சொல்வது உண்மையா?" என்றார். அச்சிறுமியுடன் ஓடி வந்த சிறுவன், 'எங்கள் சிறிய தகப்பனார் நோயால்இறந்து விட்டார். உடனே நீங்கள் வந்துவிட்டீர்கள். உங்களை உபசரிப்பதற்காக இறந்தவரை மறைத்துவிட்டு, அழுதவரை அடக்கிவிட்டு, உங்களுக்குச் சாப்பாடு போட்டார் எங்கள் தந்தையார்," என்றான். உண்மையை மறைக்க ஒருவராலும் முடியாது.

அதனைக் கேட்ட புலவர் ஓவியம் போலானார். அவர் கண்களிலிருந்து துளித்த பல நீர் முத்துக்கள் கன்னங்களில் உருண்டு அவரது மார்பை நனைத்தன. ஏறிய இமைகள் இறங்கவில்லை. விழிகளும் அசையவில்லை. வடுகநாதன் புலவரது நிலையைக் கண்டு வருந்தி, "பிறப்பும் இறப்பும் இவ்வுலகத்தியற்கை. மண்ணில் முளைத்த செடி ஒரு நாளைக்கு மண்ணில் மறைந்தே போகும். இறந்த என் தம்பிக்காக வருந்தாதீர்கள். நீங்கள் வருந்துவதுதான் எனக்குப் பெருந்துன்பம். அறிந்தோர்க்குச் சொல்ல ஒன்றுமில்லை," என்றான்.

"உன் தம்பியும் புலவரைப் போற்றும் புண்ணியனும்; தமிழை வளர்க்கும் தாயாம். அத்தகையவனை என்று காண்பேன்! இறந்த தம்பியை மறைத்து எனக்கு உண விட்டு உபசரித்துப் பொருள் கொடுத்த உன் தமிழ்ப் பற்றை நினைக்க என் நெஞ்சம் உருகுகின்றது! தம்பியை எனக்குக் காட்டுக," என்றார் புலவர்.

வடுகநாதன் அவரை அழைத்துக்கொண்டு போய் ஓர் அறையைத் திறந்தான். அவ்வறையில் பிணமில்லை.

புலவர் திடுக்கிட்டார். அவ்வறைக்குள்ளிருந்த மற்றோர் அறையைத் திறந்து, வெண்பட்டால் மூடி வைத்திருந்த பிணத்தைத் திறந்தான் வடுகநாதன். அருகில் வெள்ளிக் குத்துவிளக்கு எரிந்து கொண்டிருந்தது; சாம்பிராணி புகைந்துகொண்டிருந்தது. அவற்றைப் புலவர் கண்டு, "இறந்த பின்னும் தமிழ் ஒளி வீசும் முகமும், திரு நீறணிந்த நெற்றியும், வைர குண்டலங்கள் அணிந்த காதுகளும், பரந்தமார்பும், உருண்ட கைகளும் அல்லவா என்னை வருத்துகின்றன!" என்று கூறிக் கண்ணீருகுத் தார். வடுகநாதன் அவரைத் தேற்ற, அவர் தெளிவுற்று,

"தன்னுடன் கூடப் பிறந்துயி
ராகிய தம்பியையும்

அங்கிலே மாண்டது தோன்றுமல்
மூடிவைத் தன்னமிட்டான்

முன்னவர் போற்றிய வாழ்செந்
தலங்கை வடுகனுக்குக்

கன்னனுஞ் சோமனு மோரிக
ராயினிக் காண்பதுவே!"

("தன்னுடன் பிறந்து தனக்குயிராகிய தம்பி மாண் டான். அவன் மாண்டது தோன்றுமல், அவனை மூடி வைத்து, எனக்கு அன்னமிட்ட செந்தலங்கை வடுகனுக் குக் கன்னனையும் சோமனையுமோ இனி ஒப்பாகச் சொல்வது!") என்று கூறினர்.

வடுகநாதன் இறந்த தன் தம்பிக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து உடலைச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்றான். பாடை அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. மேளங்கள் முழங்கின. சங்குகள் ஒலித்தன.

தாரைகள் ஊதின. கண் மாரி பொழிந்தன. பிணத்தை ஈமத்தில் ஏற்றி ஈமக்கடன் செய்து, கொள்ளி வைத்துக் குடமுடைக்கப்பட்டது. பின் பல ஆண்டுகள் வடுக நாதன் தமிழ்த்தொண்டு செய்து தமிழன்னையின் திருவடிச்சோதியிற்கலந்தான்.

## நூலைப் போலச் சீலை

வடுகநாதன் மகனும் தந்தையைப் போலவே தமிழன்பனுய் இருந்தான். தமிழை அவன் தாயெனக் கொண்டான்; புலவர்களைத் தந்தை எனக்கொண்டான். அவனது செல்வ மாளிகைக்குப் புலவர்களும் பெரியோர் களும் போவதும் வருவதுமாகவே இருப்பர். அம் மாளிகையில் தமிழ்ச்சங்க முழக்கம் அன்றி வேறு முழக்கம் இல்லை.

ஒரு நாள் ஒரு புலவர் வடுகன் மகனது வீட்டிற்குச் சென்ருர். அவர் அவனுக்கு உயிர் நண்பர். அவன் எழுந்து புலவரை வணங்கி இருக்கை ஈந்தான். புலவர் அதில் அமர்ந்தார. வடுகன் மகன் அவரை முகமலர்ந்து நோக்கி, "உங்களுக்குத் திருமணம் என்றைக்கு?" என்ருன்.

"எனக்குத் திருமணம் இன்று ஐந்தாவது நாள் வெள் ளிக்கிழமை."

"மலர்க்குப் பெருமை தருவது மணம். அது போல மனிதனுக்குப் பெருமை தருவதும் மணம்."

"என் மணத்திற்கு உங்களை அழைக்கவே நான் வந்துள்ளேன். கட்டாயம் நீங்கள் வரவேண்டும்."

"நீங்கள் கால் நோக, உடல் சோர ஏன் நடந்து வந்தீர்கள்? நீங்கள் எங்கும் போய் அலையக் கூடாது என்பதற்காகவே நான் ஓர் ஏவலாளை உங்களிடம் அனுப்பியுள்ளேன். அவனிடம் சொல்லி அனுப்பினால் போதுமே!"

"நீங்கள் புலவர் தொழில் செய்யாவிட்டாலும், அவர்களைப்போல் புலமை பெற்றுள்ளீர்கள். அதற்குப்பெருமை தரவே நான் வந்தேன். எனக்கு விடை தாருங்கள். நீங்கள் குடும்பத்தோடு என் திருமணத்திற்கு வாருங்கள்," என்று கூறிப் புலவர் எழுந்தார். வடுகன் மகன் எழுந்து அவர்க்கு விடை கொடுத்தனுப்பினான்.

தனது பரந்த நெற்றியில் சந்தனப் பொட்டு; தலையில் சரிகைத் தலைப்பாகை; மார்பில் பதக்கமும் முத்து மாலைகளும்; தோளிலும் இடையிலும் வெண்பட்டுடைகள்; விரல்களில் வைர மோதிரங்கள் ஆகிய இக்கோலத்தோடு விளங்கினான் வடுகநாதன் மகன். முத்துப்பல்லக்கு அவனது வருகைக்குக் காத்துக் கொண்டிருந்தது.

மின்னு முன் இடி இடித்தது போல அவனது வீட்டிற்குள்ளிருந்து அழுகைக்குரல் எழுந்தது. திடுக்கிட்டோடிப் பார்த்தான் வடுகநாதன் மகன். அவன் மனைவி பிணமாய்க் கிடந்தாள். அவளது மதிமுகம் கலை இழந்திருந்தது; மலர்க்கண்கள் அரும்புகளாயின; பவள வாய் ஒளி இழந்த கருமணிபோன்றிருந்தது.

அவற்றைக் கண்ட வடுகநாதன் மகனுடைய கண்கள் நீரைப் பெருக்கின. "கண்ணே, கற்பகமே," என்று

அவன் கதறினன்; "உடலே, உயிரே," என்று உருகினன்; "கற்பின் கொழுந்தே, கல்விக்கடலே," என்று கதறினன். அவ்வாறு அவன் துன்புற்றுக் கொண்டிருந்த போது புலவரது திருமணம் அவனது உள்ளத்தில் உருப்பெற்றது.

உடனே அவன் அப்பிணத்தைத் துணியால் மூடித் தன் சுற்றத்தாரை நோக்கி, "நீங்கள் இதனைப் பார்த்துக் கொண்டிருங்கள். நான் புலவரது திருமணத்திற்குச் சென்று வருவேன்," என்று புறப்பட்டான்.

சுற்றத்தார் அவனைத் தடுத்து, "மனைவி இறந்து கிடக்க நீ மணத்திற்குச் செல்வது முறையோ! உலகம் உன்னை ஏசாதோ! உன்னுள்ளத்தில் துக்கம் இல்லையோ!" என்றனர்.

"நான் திருமணத்திற்கு வருவேன் என்று புலவர்க்கு வாக்குக் கொடுத்துவிட்டேன். வாக்குத் தவறக் கூடாது. நான் திருமணத்திற்குச் செல்லாவிடில் புலவர் மனம் வருந்தும். அவர் திருமணத்தை நிறுத்தியே விடுவார். அவரது இன்ப வாழ்க்கைக்கு இடையூறாக நிற்க எனக்கு விருப்பமில்லை," என்று வடுகநாதன் மகன் திருமணத்திற்குப் புறப்பட்டான்.

புலவரது திருமணப்பந்தல் நன்கு அலங்கரிக்கப் பட்டிருந்தது. பந்தலில் நிறுத்தப்பட்டிருந்த வாழை மரங்கள் குலைகளாகிய தலைகளை வணங்கித் திருமணத்திற்கு வந்தவர்களை வரவேற்றன. பந்தலினுள் கட்டப்பட்டிருந்த

முத்து விதானம் ஒளி வீசிக்கொண்டிருந்தது. பல நிற மலர் மாலைகள் பந்தலைச் சுற்றிலும் தொங்கிக்கொண்டிருந்தன. அவற்றின் இடையிடையே பல வகை வேலைப்பாட்டோடு தென்னங்குருத்தோலைகள் சிரித்துக்கொண்டிருந்தன. திருமணச் சடங்கிற்கு வேண்டிய பொருள்கள் பந்தலில் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன.

திருமணத்திற்குக் குறித்த சிறிது நேரத்திற்கு முன்னமே வடுகநாதன் மகன் திருமணப் பந்தலை அடைந்தான். புலவர் அவனை வரவேற்றார். திருமணம் வேத முறைப்படி சிறப்பாக முடிவுற்றது. ஆன்றோர்களும் புலவர்களும் மணமக்களை வாழ்த்தினார்கள்.

வடுகநாதன் மகன் புலவரிடம் சென்று, "எனக்கு விடை தாருங்கள். நான் வீட்டிற்கு விரைந்தேக வேண்டும்," என்றான்.

"நீங்கள் மணவிருந்துண்டு களைப்பாறிய பின்னர்ச் செல்லலாம்," என்றார் புலவர்.

வடுகநாதன் மகன் சற்றுத் தயங்கி, "நான் உண்ண முடியாத நிலையில் உள்ளேன். மன்னிக்கவும்! விடை கொடுங்கள்," என்று கூறினான்.

புலவர், "உண்ண முடியாத நிலை யாது?" என்று வினவினார். வடுகன் மகன் ஒன்றும் சொல்லாது நிலமகளை நோக்கினான். புலவர், வடுகன் மகனோடு வந்தவர்களை நோக்கினார். அவர்கள் புலவரை வணங்கி வடுகநாதன் மகனைச் சுட்டிக் காட்டி, "இவர்தம் மனைவியார் இன்று மாரடைப்பால் இறைவரது பொன்னடி

அடைந்தார். அடைந்தவர் உடலை மூடி வைத்து விட்டு இவர் உங்கள் திருமணத்திற்கு வந்துள்ளார்,'' என்றனர்.

அச்சொல் புலவரது செவியில் விழுவதற்கு முன்னமே அவர் கீழே விழுந்தார் ; புரண்டார் ; அலறினார். அவரது மணக்கோலம் மண் கோலமாயிற்று. அவரைப் பலர் தேற்றினர்.

"முந்தவிளை யோன்மாள முத்தமிழோர் கன்னமிட்ட
அந்த வடுகன் மகனாயின்—வந்தென்
தலைக்கலியா ணத்துக்கே தன்பிணத்தை மூடி
இலக்கணமாய்ச் செய்குவைநீ யே.''

('' தன் தம்பி இறக்க அவனை மறைத்து வைத்து ஒரு புலவர்க்கு அன்னமிட்ட வடுகநாதன் மகன் நீயன்றோ! மாண்ட உன் மனைவியை மூடி வைத்து விட்டு என் திருமணத்திற்கு வந்து சிறப்புறச் செய்தாய் நீ,'') என்று புலவர் கூறினார். வடுகநாதன் மகன் புலவர் துன்புறு வதைக் காணச் சகியாதவனாய்த் தன் ஊர் நோக்கிச் சென்றான். "புலவர் தம் திருமணத்தில் மரணச் செய்தி கேட்க நேர்ந்தது. அது அவர்க்கு ஆகுமோ! அந்தோ! புலவர் மிக வருந்துகின்றார் !'' என்று அவன் வருந்திக் கொண்டே தன் ஊரை அடைந்தான்.

அவன் தன் மனைவிக்கு இல்லில் செய்ய வேண்டிய மரணச் சடங்குகளைச் செய்தான். மலர்களால் அலங்கரிக் கப்பட்ட பாடையில் பிணம் புறப்பட்டது. பொருளுணர்ந்து, அனுபவித்து, உள்ளமுருகி இசையோடு திருவாசகத்தைச் சான்றோர் பலர் பாடிக்கொண்டே

சென்றனர். அதனை அனுபவித்துக் கேட்டவர்கள் மரணத்துன்பத்தை மறந்து; இறைவரது திருவருளில் ஈடுபட்டு இன்பமயமாயினர்.

"திருவாசகத்தின் பெருமையே பெருமை! 'கன் மனத்தை உருக்க நன்மருந்தில்லை' என்போர் அறியாதவர். 'திருவாசகத்துக்கு உருகார் ஒரு வாசகத் துக்கும் உருகார்,' என்பது எவ்வளவு அனுபவவாக்கு! தமிழின் அருமையே அருமை! இதற்கு எத்தனை சத்தி!" என்று வடுகநாதன் மகன் தன் மனைவியின் மரணத் துன்பத்தையும் மறந்தான்.

சுடுகாட்டில் சந்தனக் கட்டைகள் அடுக்கப்பட் டிருந்தன. அதன்மீது சவம் வைக்கப்பட்டு எரியூட்டப் பட்டது. அதிலிருந்து எழுந்த தீயினும் கொடிதாகத் துன்பம் அனைவரையும் வருத்திற்று. அங்கியங்கடவுள் சவத்தைத் தின்று பசியாறினார்.

இறந்த தம்பியை மறைத்துப் புலவர்க்கு அன்ன மிட்ட வடுகநாதன், மலைமேல் ஏற்றிய விளக்கு; இறந்த மனைவியை மூடிவிட்டுப் புலவர் மணத்திற்குச் சென்ற அவன் மகன், அவ்விளக்கின் கதிர். வடுகநாதன், தமிழ் முனிவர் வாழும் பொதியமலை; அவன் மகன், அம்மலையின் சிகரம். வடுகநாதன் தமிழ்ப்பூஞ்சோலை; அவன் மகன், அப்பூஞ்சோலையின் பொன்னொளி வீசும் மலர்.

# 3. சோமன்

[தினகர வெண்பா, தமிழ் நாவலர் சரிதை, ஈட்டி எழுபது ஆகிய நூல்களைத் தழுவி இவ்வரலாறு எழுதப் பட்டது.]

## விளையும் பயிர் முளையில்

தங்கப்பதுமை போல ஒரு சிறுவன் தெருவில் விளையாடிக்கொண்டிருந்தான். அவனோடு பல சிறுவர் விளையாடிக்கொண்டிருந்தனர். தங்கப் பதுமையின்மேல் புகை படிந்திருப்பது போல அச்சிறுவன்மேல் புழுதி படிந்திருந்தது. கடைந்தெடுத்தன போல அவனுடைய கைகளும் கால்களும் இருந்தன. அவனது மலர் முகத்திலே குளிர்ந்த புன்னகை தேங்கிக் கிடந்தது. நெரிச்சல்கள் உள்ள தலை மயிரில் இளந்தென்றல் புகுந்து விளையாடிற்று. சிறிய கரும்பாம்பு போல அவனது நெற்றியில் சிறு மயிர்த்தொகுதி தொங்கிக்கொண்டிருந்தது. அவன்தான் **சோமன்** என்பவன். அவனது ஊர் தஞ்சை நாட்டிலுள்ள திரிபுவனம்; காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டு.

பல சிறுவர் கூடித் தெருமணலால் சிறு வீடு கட்டினர்; ஓட்டில் மணற்சோறாக்கினர்; கொட்டாங்கச்சியில் இலைக்கறி சமைத்தனர்; பூவரச இலையில் அவற்றை இட்டு எல்லோரும் உண்டனர். ஒரு சிறுவன் மற்றொரு சிறுவனிடம் சென்று, "அப்பா, அப்பா, நான் பள்ளிக் கூடம் போகப்போகிறேன்," என்றான். "வண்டி, மாடு, பார்த்துப்போ," என்றான் அப்பனாய் நடித்த சிறுவன்.

வேருெரு சிறுவன் மற்ருெரு சிறுவனிடம் சென்று, "அம்மா, அம்மா, நான்கூட அண்ணஞேடு பள்ளிக் கூடம் போகப்போகிறேன்," என்ருன். "மேடுபள்ளம் பார்த்துப் போடா கண்ணு," என்ருன் அம்மாளாய் நடித்த சிறுவன். அவர்களுக்கு ஆசிரியன் சோமன். அவன் கம்பீரமாக உட்கார்ந்து கையில கோலேந்தி, இமைகளை விரித்து மாணவச்சிறுவர்களை அதட்டிக்கொண்டிருந்தான்.

அவ்வழியே ஒரு புலவர் சென்ருர். சோமனது அழகும் கோலமும் அப்புலவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவர் தம் மலர்க்கைகளை விரித்து அருமை பாராட்டி, "கண்ணே," என்று அழைத்தார். "புலவர் பொருள் கேட்கின்ருர்" என்று சோமன் எண்ணித் தன் நெற்றியில் அணிந்திருந்த சுட்டியை எடுத்துப் புலவர் கையில் கொடுத்துப் புன்னகை பூத்து நின்ருன். வேம்பிற் குக் கசப்பும் மருவுக்கு மணமும் இயற்கையிலே உண்டாகின்றன.

புலவரது உள்ளத்தில் மகிழ்ச்சி மேலும் பொங்க. "குழந்தாய், நான் உன்னை நெற்றிச்சுட்டிக் கேட்கவில்லை, செவ்வலரிப்பூப்போல அங்கத்திற்கு அங்கம் பூத்துக் குலுங்கும் அழகும், நீ குழந்தைகளிடத்தில் கொண்டிருக் கும் அன்பும் என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன," என்ருர்.

"அழகு என்ருல் என்ன? அன்பு என்ருல் என்ன? அவை எவை போன்றிருக்கும்? அவற்றைக் கொடுக்க முடியுமா? முடியுமாஞல் கொடுத்துவிடுவேன்," என்ருன் சோமன்.

புலவர் சிரித்து, "இவ்வினுவிற்கு விடை கூறினுல் இச்சிறுவனுல் தெரிந்துகொள்ள முடியாது," என்று எண்ணி, " கண்மணி, உன் நுண்ணறிவை நான் போற்று கின்றேன்! பிற்காலத்தில் நீ பேரறிஞனுயும் வள்ளலாயும் விளங்குவாய். நீ கடலில் பிறக்காத முத்து; விண்ணில் தோன்றுத நிலவு. மக்கள் உடல் பெற்றோரெல்லாம் மக்களாகார். நீ உண்மை மகன். மின்னுவதெல்லாம் பொன்னுகுமா?" என்று சோமன் என்பானை எடுத்து மார்போடணைத்து ஆனந்தக் கண்ணீரால் அவனை அபிடேகம் செய்து சென்றுர்.

சோமன் குழந்தைப் பருவத்தைக் கடந்து வாலிபப் பருவத்தை அடைந்தான். அவனோடு கூடவே தூய அறிவும் பெருங்கொடையும் வளர்ந்தன. அவன் பிறஉயிர் துன்புறுவதைக் கண்டால் அதனைத் தன் துயரெனக் கருதி நெருப்பிற்பட்ட மெழுகென உருகி அத்துயரைப் போக்குவான். அவனது செல்வ மாளிகையை உலகோர் தரும சத்திரம் என்றே கூறினர். அங்குச் சென்றவர்களுக் கெல்லாம் வ்யிறுர உணவும் செவிநிறைய இன்சொல்லும் கிடைத்தன. அவன் பல கோயில்களைக் கட்டினுன்; குளங்களை வெட்டினுன்; கிணறுகளைத் தோண்டினுன்; செல்வமும் அறமும் அவனிடம் போட்டியிட்டு வளர்ந்தன.

தமிழ்ச்சுவடிகளைச் சேர்ப்பதனையே அவன் முதல் அறமெனக்கொண்டான். செல்வத்தைவிடப் பாதுகாக் கத் தகுந்தவை சுவடிகள். செல்வம் அழிவதில்லை அது ஓரிடத்தில் இல்லையாளுல் மற்ருேரிடத்திற்குச் சென்று சிறப்பாய் இருக்கிறது. சுவடிகளோ, கறையான்களின் வயிறுகளுக்குட்சென்று சீரணமாகிவிடுகின்றன.

பலராலும் கீழ்மக்களாலும் தேடக்கூடியது செல்வம். சுவடிகளோ, சிலராலும் அறிஞர்களாலும் இயற்றக் கூடியவை. ஆகையால், செல்வத்தினும் சுவடிகளைப் பாதுகாத்தான் சோமன்.

புலவர்கள் விண்ணுலகு சென்று, அவர்கள் படித்த, இயற்றிய நூல்களைப் போற்றுவார் இல்லாதிருப்பின், அந்நூல்களுக்குரிய பொருளைக் கொடுத்து வாங்கி அவற்றைப் பாதுகாத்தான் சோமன். புலவர்களுக்குப் பொருள் கொடுத்தும் தொண்டு செய்தும் நூல்களை இயற்றச் செய்தான் அவன். அதனால் அவனது புகழ் அரசர் கோயில்களிலும், ஆண்டவர் கோயில்களிலும், புலவர் இல்லங்களிலும் பேசப்பட்டு வந்தது.

சோமன், சோழமன்னனைக் காண்பதற்குத் திரிபுவனத்திலிருந்து உறையூருக்குப் புறப்பட்டான்; வழியில் இயற்கையின் அழகைக் கண்டான். புலவர்கள் கூறிய வருணனைகள் அவனது உள்ளத்தில் தோன்றின. இரண்டினையும் ஒப்பிட்டு நோக்கி, "தேனுக்குச் சுவை ஊட்டியதுபோல இந்த அழகைப் புலவர்கள் எவ்வளவு அழகாகக் கூறியுள்ளனர்! அவர்களது அறிவிற்கு எதனை உவமையாகச் சொல்வது!" என்று புலவரைப் போற்றிக் கொண்டே சென்றான் சோமன்.

அவனுக்கெதிரில் ஒரு பெருங்கூட்டம் தொலைவில் வந்தது. அதனை அவன் கண்டு, "யாரோ ஓரரசர், யார் மீதோ போர்க்கு வருகிறார் போலும்! இல்லை! இல்லை! போர்க்கு வருவதாயின் போர் முரசன்றோ முழங்கும்? முழங்குவது எக்காளம் அன்றோ? அதோ

தோன்றுவது முத்துப்பல்லக்கு அன்ருே? வருபவர் புலவராக இருக்கலாம்! (சிறிது நெருங்க) வருபவர் புலவர்தாம். ஐயமே இல்லை. வெண்ணிலவை விண் மீன்கள் சூழ்ந்திருப்பன போல அப்பல்லக்கைச் சூழ்ந் திருப்பவர்கள் சான்ருேர்கள். மலையிலிருந்து அருவி விழுவது போல அவர்களுடைய தோள்களில் வெள்ளாடைகள் விளங்குகின்றன. கண்களில் கருணை வழிகின்றது," என்று சோமன் எண்ணிக்கொண்டே நெருங்கிஞன்.

நெருங்கி, அச்சான்ருேர்களை அவன் நோக்கி, "கருணை வழியும் முகங்கள்! கள்ளமற்ற உள்ளங்கள்!" என்று இன்புற்றிருந்த போது பல்லக்கில் இருந்தவர் இறங்கிச் சோமனைத் தழுவிக்கொண்டார். சோமன் திடுக்கிட்டு ஒட்டக்கூத்தரே, வணக்கம்! பல்லக்கில் வருபவர் யாரோ அரசர் என்று முதலில் எண்ணினேன்; பின்பு யாரோ புலவர் என்று துணிந்தேன். அரசர் பூவேந்தர்; நீங்கள் பாவேந்தர். உங்களுக்குத் தகும் இந்த அரசவிருதுகள்," என்ருன்.

"ஏழை பங்காளனே, எங்களுக்கு (புலவர்களுக்கு)த் தாயே, நீ செல்லுமிடம் நீண்ட தொலைவோ?" என்று வினவிஞர் ஒட்டக்கூத்தர்.

"நான் சோழவேந்தரைக் காணச் செல்கின் றேன். அவரைக் காண்பதற்குரிய காலம் யாது?" என்று சோமன் வினவிஞன்.

“தன்னுடைய தேவியர்க்கு மலர் மாலை அணிந்து சோழன் சொல்வது உன்னுடைய புகழையும் உயர் நலத்தையுமே. நெருங்கிய புகழ்ச்சோமா, திரிபுவனத் தோன்றலே, உன் புகழை யாம் எவ்வாறு இனி எடுத்துச் சொல்வது !” எனறுர் ஒட்டக்கூத்தர்.

“சோழனைக் காண்பதற்குரிய காலம் யாது ?” என்ற சோமனது வினவிற்குப் புலவர் தந்த விடை போற்றத் தக்கது. “உன்னைப் பற்றியே சோழன் தன் தேவியாரிடம் கூறிக்கொண்டிருக்கிறுன்,” என்று கூத்தர் கூறி, “அத்தகையவனை நீ காண்பதற்கென்று ஒரு காலமுண்டோ ? நினைத்த போது பார்க்கலாம்,” என்பதனை விளங்க வைத்தார்.

இருவரும் நலம் பாராட்டி, அன்பு கலந்து, இன்பம் பொங்கி உரையாடிய பின் பிரியாமல் பிரிந்தனர். தேனில் ஊறவைத்த பலாச்சுளையைத் தேனிலிருந்து எடுத்து விட்டாலும் அதில்தேன் ஒட்டிக்கொண்டிருப்பது போல, அவர்கள் ஒருவரை ஒருவர் பிரிந்த போதிலும் அன்பு பிரியாமல் இருந்தது.

சோமன் உறையூரை நோக்கிப் போய்க்கொண்டிருந்தபோது ஒரு குளிர்ந்த சோலையில் தங்கி இளைப்பாறினுன். ஒரு கிளையின் மேல் ஒரு ஆண் குரங்கு பெண் குரங்கிற்குப் பேன் பார்த்துக்கொண்டிருந்தது. பெண் குரங்கு மகிழ்வுற்றிருந்தது. அதன் வால் தொங்கிக் கொண்டிருந்தது. அருகிலிருந்த அதன் குட்டி அவ் வாலைக் கைகளால் பிடித்து ஊஞ்சலாடிற்று. ஊஞ்சலாடிய மகிழ்ச்சியிலே வேருெரு மகிழ்ச்சியும் அதற் குண்டாயிற்று. முன்னமே அக்குட்டியின் எதிரில் ஒரு

தூக்கணங்குஞ்சு கூட்டில் ஊஞ்சலாடியது. "நானும் ஊஞ்சலாட முடியவில்லையே!', என்று அது ஏங்கி இருந்தது. அவ்வேக்கம் தீர அது தன் தாயின் வாலைப் பிடித்து ஊஞ்சலாடி மகிழ்ந்தது.

சோமன் அதனைக் கண்டு மகிழ்ந்து கொண்டே உறையூரை அடைந்தான். அவ்வூரின் புறமதிலில் பாய்புலிக்கொடி பட்டொளி வீசிப் பறந்து சோமனை வரவேற்றது. சோமன் அக்கொடியை வணங்கி அரண் மனையை அடைந்தான்.

செப்புச்சிலைபோன்ற வீரர்கள் அரண்மனை வாயிலைக் காத்து நின்றனர். அவர்களுடைய முகங்களில் வீரப் பொலிவும் கைகளில் ஆயுதங்களின் மிடுக்கும் காண் போர்க்கு அச்சத்தை விளைவித்தன. அன்புநீர் அவர்கள் முகத்தில் ஒரு துளியும் காணவில்லை. சோமன் அவர்க ளிடம் சென்று, தன் வருகையை அரசனுக்கு அறிவிக் கக்கூறினான். அவர்கள் அரசனது உத்தரவு பெற்று அவனை அழைத்துக் கொண்டு போய் அரசனைக் காட்டி னார். சோமன் அரசனை வணங்கி நின்றான். அரசன் அவனைப் பார்த்து, "செந்தமிழ்ப் பயிர் வளர்க்கும் கொண்டலே வருக!" என்று வாய் குளிர அழைத்து ஓராசனத்தில் அமரச் சொன்னான். இருவரும் நலம் விசாரித்து உரையாடினர். அந்த உரையாடல் தேனும் பாலும் கலந்தது போன்றிருந்தது, பின்னர்ச் சோமன் விடை பெற்றுத் தன்னூரை அடைந்தான். அரசர் அறிய வாழ்கின்ற வாழ்வும் அன்பு வளர வாழ்கின்ற வாழ்க் கையும் பெறுதற்கு அரியன.

ஒரு நாள் ஒட்டக்கூத்தர் தம் உடல் வியர்க்க, பெருமூச்சு எழ, உள்ளம் பெருந்துன்புறச் சோமனை அடைந்து, "செந்தமிழ் வளர்க்கும் செல்வமே, நான் உனக்கு அடைக்கலம்! அடைக்கலம்!' என்றார்.

"புலவரே, அஞ்சாதீர்! என் உயிரைக் கொடுத்தாயினும் உங்கள் துயரைப் போக்குவேன். புலவர் அடைக்கலம் சிறிதாயினும் மிகப் பேரின்பம் தரும். அற்பப் புறுவின் உயிரைக்காக்கச் சிபி தராசில் ஏறினான். புலவர் உயிரைக்காக்க இவ்வுயிர்த் தியாகத்தினும் வேறு தியாகமில்லையே! உங்களுக்கு வந்த துயர் யாது?" என்று வினவினான் சோமன். அவனது முகம் சந்திரனைக் கண்ட தாமரை மலர்போன்றிருந்தது.

"செங்குந்தர்கள் தங்கள் குலத்தைச் சிறப்பித்துப் பாடுமாறு என்னை வேண்டினர். தாம் பிறந்த குலத்தைத் தாமே புகழ்ந்து பாடுவது நன்றன்று என்றேன். அவர்கள் சினந்து, அன்பின்றி என்னைத் தாக்க வந்தனர். நான் அஞ்சி உன்னைத் தஞ்சமடைந்தேன். அவர்கள் என்னைத் துரத்திக்கொண்டு வந்து உன் இல்லத்தை முற்றுகை இட்டுள்ளனர். இதோ கேட்கிறது பார் அவர்களது ஆரவாரம்! தானே கனியாத கனியைத் தடி கொண்டு தாக்குகிறார்கள் அவர்கள்," என்றார் ஒட்டக்கூத்தர். புலியைக் கண்ட மான்போல அவரது உடல் நடுங்கிற்று.

"புலவரே, நீர் சிறிதும் அஞ்சாதீர்! அவர்களுக்குச் சமாதானம் சொல்லி வருவேன்," என்று சோமன் செங்குந்தர்களிடம் சென்றான். யானையைக் கண்ட சிங்கக்கூட்டம் போல அவர்கள் கர்ச்சித்தனர். சோமன்

அவர்களை நோக்கினான். அவர்களுடைய கைகளில் ஆயுதங்களிருந்தன. அவன் அவர்களை முகமலர்ந்து நோக்கி, "பெரியோர்களே, வணக்கம்! உங்கள் எண்ணத்தை நான் முன்னமே தெரிந்துகொண்டேன். புலவரைத் தொந்தரவு செய்யாமல் செல்லுமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்றான்.

"ஒட்டக்கூத்தனை வெளியிலனுப்பும். நாங்கள் வஞ்சம் தீர்த்தே செல்வோம். ஏருத மேட்டுக்கு இரண்டு ஏற்றம் போட்டு இறைக்காதீர்," என்று ஆரவாரித்தனர் செங்குந்தர்.

"ஒட்டக்கூத்தரைப் பலவந்தப்படுத்திப் பாடச் சொல்லாதீர். மலராத அரும்பை விரித்து முகராதீர். முகர்ந்தால் மணமிராது. புலவர் ஒரு கலைக்கோயில்; கற்பகச் சோலை. திருக்கோயிலை அழித்த பாவம் கலைக் கோயிலை அழித்தவர்க்குண்டு. கற்பகப்பூஞ்சோலையைக் கரிக்கு வெட்டலாமோ? ஒட்டக்கூத்தரை நான் உங்களோடு அனுப்பமாட்டேன். அடைக்கலம் அடைந்தோரைக் காப்பது பேரறம். அடைக்கலம் அடைந்த பன்றியைக் காக்கப் பரமனோடு போர் தொடுத்தான் பார்த்தன்," என்று சோமன் கூறினான்.

"அப்படியானால் நீர் எங்களோடு போர் செய்யப் போகிறீரோ?" என்று முகங்கள் சிவக்கச் செங்குந்தர்கள் கூறினார்கள்.

"நான் உங்களோடு போர் செய்ய மாட்டேன்; என் உயிரைக்கொடுப்பேன்; புலவரைக் கொடேன். அவர்க்காக நான் உங்களோடு இப்போதே வருகிறேன். நீங்கள் வஞ்சம் தீர்த்துக் கொள்ளுங்கள்," என்றான் சோமன்.

"யானையை விரும்பிச் சென்ற சிங்கம், பூனையைத் தின்றது," என்று அவர்கள் எல்லோரும் அங்கேயே உட்கார்ந்துவிட்டனர்.

சோமன் சிறிது நேரம் சிந்தனை செய்து, "உங்கள் விருப்பம் போல ஒட்டக்கூத்தரை ஒரு மூடு சிவிகையில் அனுப்புவேன். இங்கே என் கண்ணெதிரில் அதனைத் திறந்து அவரைத் துன்புறுத்தாதீர்கள். வேறிடம் கொண்டு செல்லுங்கள்," என்றான். செங்குந்தர்கள் அதற்கு உடன் பட்டார்கள்.

சோமன் உடனே தன் வீட்டிற்குச் சென்று சிறிது நேரத்திற்குள் ஏவலர் மூலம் ஒரு மூடுபல்லக்கை அனுப்பினான். செங்குந்தர் அதனைக் கண்டு மகிழ்ந்தனர். அவர்கள் சிவிகையை வேறோரிடம் கொண்டு சென்று பல்லக்கைத் திறந்து பார்த்தனர். சிலர் சினமுற்றனர்; சிலர் திகைப்புற்றனர்; சிலர் அதிசயித்தனர். நீர்வற்றிய கிணற்றில் வெண்கலச் சிலை இருப்பது போலச் சோமன் மகன் சிவிகைக்குள்ளிருந்தனன்.

"சோமன் நெஞ்சகத்தில் வஞ்சகமுள்ளவன் அவனது உள்ளத்தில் கள்ளம்; உதட்டில் வெல்லம்," என்று செங்குந்தர் ஆரவாரித்தனர்.

சிவிகைக்குள்ளிருந்து வெளியே வந்த சோமன் மகன், "நீங்கள் என் தந்தையை இகழாதீர்கள். அவர் தமிழ்த் திருத்தொண்டர் ; புலவர்களை வளர்க்கும் செவிலித்தாய்; துன்புற்றோர்க்குப்புகலிடம். ஒட்டக்கூத்தர் எளியவர் என்று எண்ணாதீர்கள். அவர் உங்களுக்குஅஞ்சி என் தந்தையைத் தஞ்சம் அடையவில்லை. 'இச்செங்குந் தர் என்னைக் கொன்றால் எரிவாய் நரகத்தில் வீழ்வர்', என்று அவர் உங்கள்பால் இரங்கி, என் தந்தையை அடைக்கலம் அடைந்தார். அடைந்தது உங்களிடத்துக் கொண்ட அன்பினால் அன்றி, அச்சத்தினால் அன்று. சிவ பெருமானைப் பார்த்து, 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே', என்று கூறிய நக்கீரர் மரபினரல்லரோ புலவர் ?

"புலவர்கள் வில் அம்பு எடுக்காமல் சொல் அம்பால் மூவுலகையும் எரிக்கும் ஆற்றலுடையவர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். புலவரைக் காக்க நீ உயிர்த்தியாகம் செய்,' என்று என் அருமைத் தந்தை யார் என்னை அனுப்பியுள்ளார். உங்கள் வஞ்சத்தை என்மேல் தீர்த்துக்கொள்ளுங்கள்," என்று வீரவாச கத்தை எடுத்துரைத்தான்.

"நாங்கள் உனக்கொரு தீங்கும் செய்யோம். நீ ஒரு வள்ளலின் பிள்ளை. புலவர்க்காக உயிர் கொடுக்க வந்த புண்ணியன் நீ. உனக்குச் சிறு தீங்கு செய்தாலும் எங்களுக்குப் பெருந்தீங்கு செய்யும் அறக்கடவுள்," என்று செங்குந்தர் சோமனது மாளிகையை அடைந்து ஆரவாரித்தனர்.

சோமன், அவர்களை நோக்கி, "நீங்கள் உங்கள் வீரத்தை அரசன் முன் காட்டுவீராயின், ஒட்டக்கூத்தர் உங்கள் குலத்தைச் சிறப்பித்துப் பாடுவார்," என்றான். 'நாங்கள் அவ்வாறே செய்வோம்,' என்று அவர்கள் அரசனது அரண்மனையை அடைந்தனர். அவர்களுடைய முகங்களில் வீரப்பொலிவு விளங்கிற்று,

அங்கு அரசனுக்கருகில் ஒட்டக்கூத்தர் எழுந்தருளி இருந்தார். செங்குந்தர்களுட்பலர் தங்களை வெட்டிக் கொண்டனர். உயிருடனிருந்தோர் அத்தலைகளை அரசன் முன் அடுக்கினர். 'புலவரே, எங்கள் குலத்தைச் சிறப் பித்துப் பாடுங்கள்,' என்று கூறுவனபோல வெட்டுண்ட தலைகள் வாய்களைத் திறந்தன. புலவர் தங்களைப் பாடுவார் என்ற மகிழ்ச்சியால் குறை உடல்கள் கூத்தாடின; கைகள் கும்பிட்டன. கண்டோர் திடுக்கிட்டனர்; மெய்ம் மறந்தனர்.

" இனி இவர்களைப் பாடலாம். 'குலப்பற்றால் ஒட்டக் கூத்தர் தம் குலத்தைப் பாடினார்,' என்று உலகம் இனிக் கூறாது," என்று கூத்தர் கருதி, அத்தலைகளின் மேல் நின்று பாடினார். அப்பாடல்களின் தொகுப்பே ஈட்டி எழுபது என்னும் நூல்.

ஒட்டக்கூத்தர்க்கு அடைக்கலம் கொடுத்து மகிழ்ந் தான் சோமன். 'ஒட்டக்கூத்தர்க்காக உயிர் கொடுக்கப் போகிறேன்!' என்று இன்புற்றான் சோமன் மகன். செங் குந்தரின் வீரச்செயலைப் பாடி வியப்புற்றார் ஒட்டக் கூத்தர். அவரது பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தனர் செங்குந்தர்.

# 4. சம்பந்தச் சர்க்கரை

## சர்க்கரை மன்றாடியார் சிறைப்படல்

[இவ்வரலாறு கொங்கு மண்டல சதகத்தைத் துணை கொண்டு எழுதப்பட்டது.]

இந்திய நாட்டின் வரலாற்றில் சிறந்த இடம் பெற்ற மன்னர்களில் ஒருவர் திருமலை நாயக்கர். அவர் கி. பி. 1584 ல் பிறந்தார்; 1623 ல் அரியணை ஏறினார். இராமையர் என்னும் அந்தணர், நாயக்கருக்கு அமைச்சராகி அருஞ்செயல் புரிந்தார். அவரை 'இராமப்பையர்' என்றும் கூறுவர். அவர் ஆட்சித் திறனும், போரின் நுட்பமும் அறிந்தவர்; தாம் புகுந்த செயலில் வெற்றி காணும்வரை விடாமுயற்சி உடையவர்.

திருமலை நாயக்கர் தம் ஆட்சிக்குட்பட்ட நாட்டை எழுபத்திரண்டு வட்டமாகப் பிரித்து, ஒவ்வொரு வட்டத்திற்கும் ஒவ்வொரு பாளையக்காரரை நியமித்தார். பாளையம் என்பது படை. பாளையத்திற்குத் தலைவர் பெயர் பாளையக்காரர். அரசனால் குறிப்பிட்ட நாட்டையும் படையையும் வைத்துக் கொண்டு அவன் அழைத்தபோது படையுடன் சென்று போர் புரிய வேண்டும் என்பது பாளையக்காரர்க்கு உரிய நிபந்தனை. திருமலை நாயக்கருக்கு உரிய எழுபத்திரண்டு பாளையக்காரருள் ஒருவர் ஆனூர் சம்பந்தச் சர்க்கரை மன்றாடியார். அவர் ஆனூர் வட்டத்துக்குத் தலைவர். அவ்வட்டம் கொங்கு நாட்டின்

சிறுநிலப் பகுதி. அது அப்போதைய கோவை மாவட்டத்தைச் சேர்ந்தது. ஆனைமலை நொய்யல் ஆற்றை அடுத்துள்ளது. கொங்கு நாட்டின் பெருமையைக் கொங்கு மண்டல சதகத்தில் காணலாம்.

கருவூலத் தலைவன், இராமப்பையரை வணங்கி, "அமைச்சர் தலைவரே, பெரும்படைத்தலைவரே, வணக்கம்! வணக்கம்! நம் பாளையக்காரர் பலர் நமக்குத் திறைப்பொருள் செலுத்தவில்லை. அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சர்க்கரை மன்றாடியார். அவர் மூன்று முறை திறை செலுத்தவில்லை. அவரைப் பல முறை கேட்டேன். பாறைமேல் மழை பெய்தது போல இருக்கின்றார் அவர். அவரைப் பார்த்தே மற்றப் பாளையக்காரர்களும் திறை கொடுக்கவில்லை. ஓர் ஆடு செல்லும் வழியே மற்ற ஆடுகள் செல்லும்;" என்று கூறினான்.

அதனைக் கேட்ட அமைச்சர் இராமப்பையரது செவந்திப் பூப்போன்ற முகம், செவ்வலரிப் பூப்போலாயிற்று; உடல் கனலாயிற்று. அவர் அங்கிருந்த படைத் தலைவனைப் பார்த்து, "ஈசலுக்கு அழிவு காலம் வந்தால் சிறகு முளைக்கும். அது போல மன்றாடியார்க்கு அழிவு காலம் வந்ததால், அவர் திறை கொடுக்க மறுக்கிறார். இந்த இராமப்பையன் உயிரோடிருக்கும் வரை எந்தப் பாளையக்காரனும் பகைவனும் தலை நிமிர முடியாது. மூட்டைப் பூச்சியை நசுக்குவதைப் போல நசுக்கியே தீர்வேன்! நீ சென்று மன்றாடியாரைத் திறை கேள். அவர் கொடுக்க மறுப்பாராயின், அவரைக் கொண்டு வந்து என் கண்ணெதிரில் நிறுத்து," என்று கடுகடுத்துக்

கூறினார். படைத்தலைவன் அமைச்சரை வணங்கிச் சென்றான்.

சென்ற படைத்தலைவன் ஏவலாளனைப் பார்த்து, "என் உயிர் போன்ற குதிரைக்குச் சேணமிட்டுக் கொண்டு வருக," என்று கட்டளை இட்டான். அவ்வாறே அக்குதிரை அங்கு நிறுத்தப்பட்டது. அதன் நீண்ட கால்கள் நான்கும் வெண்மை. அதன் நெற்றிச் சுட்டி விண்ணில் நிலவுபோலத் திகழ்ந்தது. பிடரி அதன் கழுத்து மறையத் தொங்கிற்று. எண்ணெய் பூசியது போல அதன் மேனி பளபளத்தது. அதன் வயிறு அவரைப் பிஞ்சு போலத் தோன்றியது.

அக்குதிரையின்மீது படைத்தலைவன் பாய்ந்தேறினான். குதிரை விரைந்தோடியது. அது அடி வைத்த இடங்கள் எல்லாம் அரையடிப் பள்ளமாயின. சில நாள் சென்று படைத்தலைவன் ஆறூரை அடைந்தான். சர்க்கரை மன்றாடியார் அவனை வரவேற்றார். படைத்தலைவன் அவரை வணங்கி, "சர்க்கரை போல இனிக்கப் பேசும் சர்க்கரை மன்றாடியாரே, நீங்கள் மூன்று முறை திருமலை நாயக்கருக்குத் திறை செலுத்தவில்லையாம். நீங்கள் அதனைக் கொடுக்க மறுத்தால் உங்களைக் கொண்டு வந்து தம்முன் நிறுத்தச் சொன்னார் இராமப்பையர். அதனை உங்களுக்கு வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்," என்றான்.

"அரசர்க்குரிய திறைப்பொருள் ஏழைகளுக்கும் புலவர்களுக்கும் உரியதாயிற்று; மக்களிடத்திலிருந்து வந்த பொருள் மக்களிடமே சென்றுவிட்டது. மண்ணிலே தோன்றிய பொருள் மண்ணிலே மறைந்துவிடுகின்றது.

அதுவே இயற்கை. வாருங்கள் திருமலை நாயக்கரிடம் செல்வோம்,'' என்று கூறி மன்றாடியார் புறப்பட்டார். பாகரால் குதிரை சேணமிட்டு அங்கே நிறுத்தப்பட்டது.

அக்குதிரையின் உடல் சிவப்பு; வால், பால்போல் வெண்ணிறம்; தலையாட்டம் அதன் நெற்றிக்கு அழகு செய்தது. கரும்பைக் கடிப்பது போல அக்குதிரை இரும்புக் கடிவாளத்தைக் கடித்தது; கடிய குளம்பு களால் நிலத்தைத் தட்டிப் புழுதியைக் கிளப்பிற்று. சர்க்கரை மன்றாடியார் அதன் அருகிற்சென்று இடக் கையால் அதன் பிடரியைப் பிடித்து, வலக் கையால் அதனைத் தட்டிக் கொடுத்தார். அது இடி போலக் கனைத்தது, அது தன்மீது அவரை ஏறிக்கொள்ளச் சொன்னது போன்றிருந்தது. மன்றாடியார் அதன்மீது தாவி ஏறினார். படைத்தலைவன் தன் குதிரையின் மீது பாய்ந்தேறினான். இரண்டு குதிரைகளும் மிக விரைந் தோடின. அவற்றைக் கண்டோர், "இக்குதிரைகளின் கால்கள் நிலத்தில் படுகின்றனவோ இல்லையோ!'' என்று ஐயுற்றனர். அவை சின்னாட்களில் மதுரையை அடைந்தன.

மன்றாடியார் இராமப்பையரைக் கண்டார். இராமப்பையர் சினத்தோடு, "எங்களுக்கு நீர் ஏன் பல முறை இறைகொடுக்கவில்லை?'' என்றார்.

"கொடுக்க முடியவில்லை.''

"குடிகளிடத்தில் வரியாக வசூல் செய்த பணத்தை என்ன செய்தீர்?''

"குடிகளுடைய பணத்தைக் குடிகளுக்கே செலவு செய்தேன்."

"யாருடைய உத்தரவினுல் ?"

''குடிகளது உத்தரவினுல்.''

''குடிகளே உம்மைச் சிறையிலிருந்து மீட்கட்டும்."

"அமைச்சரே, ஆராய்ந்து பாரும்; உலகமே ஒரு சிறைதான். சிறை செல்ல நான் அஞ்சவில்லை. அருள் உருவான மணிமேகலை சிறைச்சாலையை அறச்சாலை ஆக்கியது போல நானும் சிறைச்சாலையைத் தவச்சாலை யாகச் செய்துகொள்வேன்."

"இந்த மன்ருடியாரைச் சிறையிலடை," என்று தம் நெற்றியில் ஏறிய புருவங்கள் இறங்காமல் இராமப் பையர் படைத்தலைவனைப் பார்த்துக் கூறினுர்.

மன்ருடியாரைப் படைத்தலைவன் சிறையிலடைத் தான். அவர் சிறிதும் மனம் கலங்கவில்லை. அவர் மகிழ்ந்து, "சிறை வாழ்க்கையின் இன்பமே இன்பம்! இன்பம் எங்கே இருக்கிறது? மன அமைதியில், அரசியலில் மன அமைதி ஏது? அரசியலை, 'இராச்சிய பாரம்' என்கின்றனர். இல்லறத்தைச் 'சம்ஸார சாகரம்' என்று கூறுகின்றனர். அவை முற்றும் உண்மை. இராச்சிய பாரத்தைத் தாங்கி, சம்ஸார சாகரத்தில் மூழ்கிய எனக்கு இன்பம் ஏது? இப்போது இராச்சிய பாரம் என்னைவிட்டு நீங்கிற்று. சம்ஸார சாகரத்திலிருந்து ஏறி இன்பக் கரையில் இருக்கின்றேன்!" என்று இனிதிருந்தார்.

# விடுதலை

இராமப்பையர் சம்பந்தச் சர்க்கரை மன்றுடியாரின் அசையும் பொருள் அசையாப் பொருள் அனைத்தையும் கைப்பற்றி, அந்த ஆட்சியையும் தாமே மேற்கொண்டார்; மன்றுடியாரின் மனைவியாரையும் வீட்டை விட்டு வெளியேற்றினர். மன்றுடியாரின் கற்பரசியார் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே வேறொருவர் வீட்டில் குடியேறினர். அச்செய்தி மன்றுடியாருக்குத தெரியாது.

தம் கணவராகிய மன்றுடியார் அரசை இழந்த துயர் அந்தஅம்மையாரை வாட்டியது; அதனினும் அவர் சிறையிலடைக்கப்பட்டுக்கிடப்பது பெரிதும் எரித்தது. அவர் கண்ட பொருள்கள் எல்லாம் அவருக்குக் கனவாகத் தெரிந்தனவே அன்றிப் பொருளாகத் தெரியவில்லை. அந்த அம்மையார் தம்மீது அழகுக்கு இட்ட ஆபரணங்கள் ஆபத்துக்கு உதவின. ஒரு வேளை உண்டும், மறு வேளை உண்ணுமலும் அவர் காலம் கழித்தார். அந்த ஒரு வேளை உணவுதான், ஓடக்கூடிய அந்த ஆருயிரை ஓடாமல் அவ்வுடலில் அடைத்து வைத்திருந்தது. ஒரு நாள் அம்மையாருக்கு ஒரு திங்கள்; ஒரு திங்கள் ஓராண்டு. மூட்டைகள் நிரம்பிய வண்டி சேற்றில் நகர்வது போல அவரது வாழ்க்கை நகர்ந்தது.

சர்க்கரை மன்றுடியாரைச் சிறை விழுங்கியதைக் கேள்வியுற்றார் தமிழ் அமுதம் உண்ட ஒரு புலவர்; வளர்ந்து விளைந்த மன்றுடியாரின் அருங்குணத்தை அவர் எண்ணி உருகினர். "புலவரைப் போற்றிய மன்னருக்கா சிறைக்கோட்டம்!" என்று உள்ளத்தில் ஒளிரும் இறைவனை வினவினர் அவர். தமிழ்ப் பூங்காவை வளர்த்த

அந்த அருள் மேகத்தைக் காண விரும்பி விரைந்து சென்றார் புலவர்.

சென்ற புலவர் சிறைச்சாலையை அடைந்தார்; சிறை அதிகாரிக்குத் தம் வருகையைத் தெரிவித்தார். அதிகாரி ஒன்றும் சொல்லாமல் ஓவியம்போன்றிருந்தார். அவரது சிந்தனை சுழல்வதைக் குறிப்பால் உணர்ந்தார் புலவர்.

"நான் சர்க்கரை மன்றாடியாரைக் காண உத்தரவு கொடுங்கள். புலவர் வாழ்க்கை பொய் கலவாதது; அருள் கலந்தது. உங்களுக்கு ஐயம் வேண்டா. நான் உண்மைப் புலவன்; ஒற்றன் அல்லேன்," என்றார் புலவர்.

அதிகாரி புலவர்க்கு உத்தரவு தந்தான். புலவர் சிறையினுட்சென்றார். சர்க்கரை மன்றாடியார் போலவே பல தளவாய்மாரும் சிறைப்பட்டிருந்தனர். அவர்களும் திருமலை நாய்க்கருக்குத் திறை கொடாதவர்கள். அவர்களுக்குத் தென்றல் கவரி வீசிற்று; மரங்கள் குடை பிடித்தன; பறவைகள் செந்தமிழ் பாடின.

அவர்களுள் மன்றாடியார் யார் என்பதைப் புலவரால் கண்டுகொள்ள முடியவில்லை. அவர்களைப் புலவர் பார்த்து, "ஆனூர்ச் சம்பந்த சர்க்கரை மன்றாடியார் யார்? நான் ஒரு புலவன். அவரைக் காணும் ஆவலால் வந்துள்ளேன்," என்றார்

"நீ புலவனாக இருக்கலாம்; காவியக்கலை கற்றிருக்கலாம்; ஆனால், உலகியற்கலை கற்கவில்லை. அவர் ஆனூர் வட்டத்தின் அதிகாரமிழந்து, அல்லற்பட்டு, சிறைப்பட்டிருக்கிறார். இப்போதா அவரைப் பரிசு கேட்பது? தாடி பற்றி எரியும் பொழுது சுருட்டுக்கு நெருப்புக்

கேட்கின்றாய். நன்று உன் புலமை!" என்று அவர்கள் எள்ளி நகைத்தார்கள்.

"பரிசுக்காகத்தான் புலவர் மற்றவரைக் காண்பரோ? ஆற்று வெள்ளம் கிழக்கு நோக்கி வருவது கடலில் கலப்பதற்காகத்தானோ? நான் பரிசு கேட்பினும் மன்றாடியார் கொடுத்தே தீர்வார். வெயிலின் கொடுமையால் தன்னை அடைந்தவர்க்குக் குளிர்நிழலைத் தருகின்றது மரம்.

"எவரையென்று நாமறியோ மிரப்பவனோ
இடமறியா னிரவி னுகங்
கவருமதி யொருபுறத்தே நிலவெறிக்கும்
பான்மைதனைக் கண்டி லீரோ?
அவரையபத மாகுமுனங் கடுகுபொடி
யாகிவிடு மதனை யோர்ந்து
யுவரைமுதற் காதலனுஞ் சம்பந்தச்
சருக்கரையார்? சொல்லு வீரே."

("சர்க்கரை மன்றாடியார் யார் என்று நாம் அறியோம்; யாசிப்பவனோ இடம் அறியான். கேது என்னும் கரும்பாம்பு இரவில் நிலவின் ஒரு புறத்தைப் பற்றிய போதிலும் மற்றொரு புறத்தால் உலகிற்கு ஒளி தரும் தன்மையை நீங்கள் காணவில்லையோ? அவரைக்காய் பதமாகக் காயுமுன் கடுகு பொடியாகிவிடும். அதனை நீங்கள் தெரிந்து சம்பந்தச் சர்க்கரை யார் என்பதை எனக்குச் சொல்லுங்கள்.)

என்றார் புலவர். அவர்கள் புலவரின் நுண்ணறிவைப் போற்றி மகிழ்ந்தார்கள்; ஆயினும், நாணமும் கொண்டார்கள். அவர்கள் புலவரை வணங்கி, "இங்கிருக்கும் தளவாய்மாருள் மலர் முகத்தோடு இருப்பவர் எவரோ அவரே சர்க்கரை மன்றாடியார்," என்று கூறி அவரைப் புலவர்க்குக் காட்டி, மன்றாடியார்க்குப்

புலவரை அறிமுகப்படுத்தினார்கள். "அரசே, அரசே," என்று அவரைக் கட்டித்தழுவினர் புலவர். அவரும் புலவரைத் தழுவினர். இருவருள்ளத்திலும் பொங்கி எழுந்த அன்பு வெள்ளம் கண்களாம் கரைகளை உடைத்துக்கொண்டு இருவருடைய தோள்களையும் நனைத்தது. இருவரும் தெளிவடையச் சிறிது நேரம் சென்றது.

"பொய்யொழுக்கம் அற்ற புலவரே, அடியேனைத் தேடி வந்த உம் மெல்லடிகள் எவ்வாறு வருந்தினவோ! நான் இருக்கும் திக்கையே நோக்கிய உங்கள் சரு விழிகள் எவ்வாறு நொந்தனவோ! தீவினையேனை நினைந்து நைந்த உங்கள் திருந்திய உள்ளம் எவ்வாறு உருசிற்றோ! நான் சிறையை அடைந்த நாள் முதலாக ஒரு புலவரையும் காணுமல் மிக வருந்தினேன்; உங்களைக் கண்டு இன்று மகிழ்ந்தேன். விண்ணில் கணக்கற்ற மீன்கள் இருப்பினும், மலருமோ செந்தாமரை?" என்று அன்புரைகளால் புலவரைப் போற்றினர் மன்முடியார்.

"குறுநில வேந்தரே, இழந்த அரசை நீர் மறுபடியும் பெறுக! அன்று அரண்மனையில் அறிஞர்க்கிடையில் அருங்கலை உண்டு மகிழ்ந்த உமதுள்ளம், இன்று சிறைக் கூடத்தில் எவ்வாறு துன்புறுகின்றதோ! வினைப்பயனை வெல்ல வேதமுதலான எந்த நூல்களிலும் விதி இல்லை. இன்னும் சில நாட்களுக்குள் உமக்கு விடுதலை கிடைக்கும். வருந்தற்க!" என்றார் புலவர்.

"நான் சிறைக்கோட்டத்தில் இருப்பதனுல் சிறிதும் வருந்தவில்லை; உங்களுக்குப் பரிசு கொடுக்க என்னிடம் இப்பொழுது ஒன்றும் இல்லையே என்றுதான்

வருந்துகிறேன். என் ஆருயிராம் மனைவியிடம் செல் லுங்கள். அவள் உங்களை அன்போடு வரவேற்பாள்; இன்சொல் கூறுவாள்; நிரம்பப் பரிசும் தருவாள்,'' என்று மன்றுடியார் கூறினார்.

"மாசிலா மணியே, மரகதக்குன்றே, இன்பக் கனியே!, நான் உம்மிடம் பரிசுக்கு வரவில்லை. உமது இனிய காட்சிக்கு வந்தேன்; கண்டேன்; களித்தேன்!'' என்றார் புலவர்.

நீங்கள் என் மனைவியைக் காண வேண்டும் என்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அவள் உங்களைக் கண்டால், ஆறுதல் அடைவாள். அதற்காக நீங்கள் என் மனைவியைக் காணுங்கள். எல்லோர்க்கும் மகிழ்ச்சி உண்டாகும்,'' என்று மன்றுடியார் ஒரு கடிதத் தைப் புலவரிடம் கொடுத்தார்.

"மன்றுடியாரே, உம் கற்பரசியாம் தமிழணங்கை யான் சென்று காண்பேன்; உறுதி கூறுவேன்; இதோ செல்கிறேன்,'' என்று புலவர் சென்றார். மன்றுடியார் எழுந்து நின்று கைகளைக் கூப்பினார். கூப்பிய கைகள் மார்பிலே நின்றன, இமையாக் கண்களிலிருந்து. ஒழுகிய கண்ணீர் மன்றுடியாரின் மார்பகத்தைக் குளிரச் செய்தது. புலவர்க்குப் பரிசு கொடுக்கவில்லையே!'' என்று வருந்தியதால் ஒழுகிய கண்ணீரது.

மன்றுடியாரின் மனைவியார் தம்மீதிருந்த அணிகலன் களை ஒவ்வொன்றாக விற்று ஒருவாறு காலந்தள்ளினார். எல்லா நகைகளும் விற்கப்பட்டன. பின்பு அவர் தாலிச் சரட்டில் கோத்திருந்த உருவுகளுள் ஒவ்வொன்றையும் விற்றுக் குடும்பத்தை நடத்தினார். தாலிச்சரட்டில் எஞ்சி நின்றது தாலி ஒன்றுதான். மலர்கள் உதிர்ந்த மாதவிக் கொடி போல அம்மையார் காணப்பட்டார்.

புலவர் ஆனூரை அடைந்து, அந்த அம்மையார் வீட்டை அடைந்து, வாயிலில் நின்று, 'அம்மையே,' என அன்பொழுக அழைத்தார். அதனைக் கேட்ட அந்த அம்மையார் திடுக்கிட்டார்; சோர்ந்தார்.

"ஐயையோ! நான் என் செய்வேன்! யாரோ ஒருவர் என்னை அழைக்கின்றார். நான் உடுத்தி இருக்கும் சேலையோ சாயம் போனது. அதிலும் பல கிழிச்சல். என் தலைமயிரோ, காற்றில் பறக்கிறது. இந்த வறுமைக் கோலத்தோடு நான் வந்தவரை எவ்வாறு வரவேற்பேன்! என்னுள்ளம் நாணுகிறதே!" என்று அம்மையார்பலகணி வழியே ஒதுங்கி நின்று பார்த்தார். 'நிற்கின்றவர் நல்லவர்' என்று தெளிந்தார். 'இப்பெரியார் என்னை இகழார்' என்று அந்த அம்மையார் துணிந்து, விரைந்து சென்று, அவரை வணங்கினார் மன்றாடியார் கொடுத்த கடிதத்தைப் புலவர் அவரிடம் கொடுத்தார். அம்மையார் படித்து, 'புலவரே, வருக!' என்று கைகூப்பி நின்றார். மஞ்சள் குளிக்கப்பட்டிருந்த அம்மையின் முகம் பொற்குடத்துக்கு மெருகு கொடுத்தது போல ஒளி வீசிற்று. அவரது நெற்றியிலிருந்த குங்குமம், பொற்குடத்துக்கு பொட்டிட்டது போலத் தோன்றியது; தலை முடிகள் காற்றால் அசைக்கப்பட்டன. புலவர் அந்த அம்மையாரைக் கண்டார், அவர் நின்றவர் நின்றவர்தான். ஆனால், அவர் கண்ணீர் மட்டும் நிற்கவில்லை. உலகமே அவருக்குச் சுழல்வது போன்றிருந்தது.

"அம்மையீர் புலவர்கட்கும் ஏழைகட்கும் அள்ளி அள்ளிக் கொடுத்த உங்களுக்கா இந்த வறுமை!" என்று கண்ணீரைத் துடைத்துக்கொண்டே புலவர் கதறினார்.

"புலவரே, வருந்தாதீர். இன்ப துன்பம் இவ்வுலகத் தியற்கை. இந்த மஞ்சள் குங்குமந்தாம் எனக்கு மாணிக்கமும் பொன்னும். இவை நிலைத்திருந்தால் போதும். உண்பதற்கு வாருங்கள்," என்று மன்றாடியார் மனைவியார் புலவரை அழைத்துச் சென்றார். பனை ஓலைத் தடுக்கு அவருக்கு இருக்கையாக இடப்பட்டது. புலவர் அதில் உட்கார்ந்தார். புளியங்காய்த் துவையலையும். புளித்த மோர் விட்டுக் கரைத்த கூழையும் புலவர் முன் வைத்து, 'புலவரே, உண்ணுங்கள், என்றார் அம்மையார்.

புலவர் உண்ணும்போது அவர் வெயிலில் வந்த களைப்பினால் அவர் உடலில் நீர் முத்துக்கள் அரும்பின. மன்றுடியாரின் மனைவியார் பிய்ந்த விசிறியால் வீசி வியர்வையையும் களைப்பையும் போக்கினார். புலவர் தம் வயிறார உண்டார்.

"அம்மையீர் அன்பையும் இக்கூழோடு கரைத்து இட்டீர். மேலும், இன்சொல்லையும் அதனோடு இணைத்து விட்டீர். கடலை ஒருவாறு ஆழங்கண்டாலும் உமது ஆழ்ந்த அன்பினை ஆழங்காண முடியாது. உமது கண்ணின் மணியாம் உம் கணவர் சிறைச்சாலையிலிருந்து விரைவில் மீள்வார். நான் போக விடை தாரும்,' என்றார் புலவர்.

"சிறிது நேரம் இங்கே இளைப்பாறுங்கள். பின்னர் நீங்கள் போகலாம்,'' என்று அம்மையார் வேறிடம் சென்றார். அவர் மனம்இழுத்து விடப்பட்ட பம்பரம்போலச் சுழன்றது; துன்பப்பட்டது. "புலவர்க்குப் பரிசுகொடுக்கச் சிறையிலுள்ள என் கணவரிடத்தில் பொருளேது? அதறியேதான் புலவரை அவர் என்னிடத்தில் அனுப்பினார். இராமப்பையன் எங்கள் பொருளைக் கைப்பற்றியது அவர்க்குத் தெரியாதன்றோ! என் செய்வேன்! புலவர்க்குப் பரிசில் கொடுக்க வேண்டுமே!'' என்று சிறிது நேரம் அம்மையார் சிந்தனையில் துன்பம் கூத்தாடியது.

"ஒன்றும் புரியவில்லையே!'' என்று அம்மையார் மார்பில் கையை வைத்தார். அவரது தாலி அவருடைய கைகளை உறுத்தியது. அவர் மகிழ்ந்தார்; ஒரு மஞ்சளை ஒரு கயிற்றில் கட்டி அதனைத் தம் மணிக்கழுத்தில் கட்டிக்கொண்டார்; பெரியோர் முன் அன்று திருமணப் பந்தலில் சர்க்கரை மன்றுடியார் கட்டிய தாலியைத் தம் கழுத்திலிருந்து நீக்கினார்; அதனை ஓர் இலையில் மடித்து வெற்றிலை பாக்கில் வைத்துப் புலவரிடம் சென்று, "புலவரே, இதனைப் பெற்றுக்கொள்க!'' என்று வெற்றிலைபாக்கை அவர் நீட்டினார். புலவர் அதனைப்

பெற்று அதிலிருந்த பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தார். அவரது உடல் நடுங்கிற்று. வெற்றிலே பாக்கும் தாலி யும் கீழே விழுந்தன. புலவர் தாலியை நடுங்கிய கைகளால் எடுத்து, "அன்னையீர், இந்தத் தாலியைப்பெற்றுக் கொள்க. இத்தகைய செயல் யார் செய்வார்! பரிசுக்காக நான் உம்மிடம் வரவில்லை; உமக்கு உறுதி கூறவே வந்தேன். இதனைப் பெற்றுக்கொள்க" என்று சினந்து கூறி அத்தாலியைக் கொடுத்தார்.

"அறஞ்செய்த பொருளை யாரும் திரும்பப் பெறக் கூடாது. பெறுவது அறத்துக்கு விரோதம். தமிழை நம்பி வாழ்கின்ற உங்களுக்குக் கொடுக்க வேண்டுவது உலகத்தின் கடமை. புலவரே, உங்களுக்கு விடை கொடுத்தேன். சென்று மறுமுறை வாருங்கள்," என்றார் அந்த அம்மையார். அவருடைய கயல் விழிகளில் அன்பின் ஊற்றும் பவள உதடுகளில் புன்முறுவலும் அரும்பின.

புலவர் தாலியைப் பெற்றுத் திரும்பினார். கணவன் மனைவி என்றால் மன்றாடியாரும் அவர் மனைவியாரும் போலன்றோ இருக்கவேண்டும்? இருவருள்ளமும் ஒரே அச்சில் வார்த்தவை. இருவர் உள்ளத்தையும் ஒன்றாகப் படைத்த பரமன் ஏனோ உடலை மட்டும் இரண்டாகப் படைத்தான்! படைத்ததில் ஓர் இரகசியம் இருக்கும்! இது வியப்பிற்குரிய செயல்! நான் இராமப்பையனைக் கண்டு மன்றாடியாரை விடுவிக்க முயல்வேன். பெருந் தலைச் சாத்தனார் நாடிழந்து காடு சென்ற குமண வள்ளலை மறுமுறை நாடாளச் செய்யவில்லையா?" என்று புலவர் இராமப்பையரைக் காணச் சென்றார்.

காணச் சென்ற புலவர், தம் வருகையை அமைச்சர் இராமப்பையர்க்குத் தெரிவித்தார்; அவரது உத்தரவு பெற்று அவரிடம் சென்றார். அவர் புலவரைப் பார்த்து,

"புலவரே, வருக! வெயில் எரிக்க எரிக்க, உடல் வியர்க்க வியர்க்க எங்கிருந்து வருகின்றீர்?" என்றார்.

"மன்றாடியார் மனைவியாரிடமிருந்து வருகின்றேன்"

"மன்றுடியாரோ சிறையிலிருந்து உயிரோடு மன்றுடு கின்றார். அவர் மனைவியாரோ இருக்க நிழலுக்கும் குடிக்கக் கூழுக்கும் திண்டாடுகின்றார். அவரிடமா நீங்கள் சென்றீர்கள் ?"

"அவர்களை அக் கதிக்கு ஆளாக்கியவர் நீர் தாம். அந்த அம்மையார் அறம் பழுத்த கற்பகத்தரு."

"அவர் அறம் பழுத்த கற்பகத்தரு என்று பொய் சொல்லாதீர். அவர் குடிக்கக் கூழும் இன்றிப் பட்டினி யோடு போராடுகின்றார். அவருக்குப் பொருளேது அறம் செய்ய ?"

', அம்மையார் அறம் பழுத்த கற்பகத்தரு எனறு நான் கூறியது உண்மைதான்."

"அதனை மெய்ப்பித்துக் காட்டும்."

"நான் அந்த அம்மையாரிடம் பரிசுக்குச் செல்ல வில்லை ; அவரைப் பார்க்கச் சென்றேன். அவரிடத்தில் பொருள் சிறிதும் இன்மையால் தாலியை எனக்குப் பரிசாகத் தந்தார்."

புலவர் தம் மடியிலிருந்த தாலியை இராமப்பைய ரிடம் கொடுத்தார். இராமப்பையர் கண்டு அதிசயித்து, "ஆ ! ஆ ! இத்தகைய பேரருளாளரைத் துன்புறுத்தியது என் குற்றம் ! 'ஆற்று நீர் அற்று அடி சுடும் அக்காலத் திலும் அங்கே தோண்டினால் நீர் கிடைக்கும்,' என்றதை மறந்தேன் ! 'ஏழைகள் விட்ட கண்ணீர் கூறியவாளை ஒக்கும்,' என்ற முதுமொழியையும் எண்ணாமல் போனேன்.' எனப் பலவாறு கூறி வருந்தினார்.

"உமது வருத்தம் ஒழிய வழி உண்டு" என்றார் புலவர். உடனே இராமப்பையர் ஏவலாளரை நோக்கி, "சிறையிலிருக்கும், ஆரூரார்ச் சம்பந்த சர்க்கரை மன்றுடி யாரைப் பல்லக்கில் இங்கு அழைத்து வருக" எனக் கட்டளையிட்டார். அவர்கள் அவ்வாறே செய்தார்கள்.

சர்க்கரை மன்றுடியாரை இராமப்பையர் கண்டதும் பரதனைக்கண்ட இராமனைப்போல மகிழ்ந்து இருக்

கையைக்காட்டி, "மன்றாடியாரே, இந்த இருக்கையில் அமருங்கள்," என்று அன்பு கனிய இன்பம் சுரக்கக் கூறினார் இராமப்பையர். சாக்கரை மன்றாடியார் அங்கு உட்கார்ந்தார். "உங்கட்குப் பெருந்துன்பம் தந்ததற்கு மிகவும் வருந்துகிறேன். தாலியைப் புலவர்க்குப் பரிசாகத் தந்த உம் மனைவியாரின் வள்ளன்மையைப் புகழ்வேனோ, அந்த அம்மையை மனைவியாக அடைந்த உம்மைப் புகழ்வேனோ, உங்களது செப்பம் செய்யப்பட்ட வள்ளன்மையை உலகறியச் செய்த புலவரைப் புகழ் வேனோ? உம்மைச் சிறையிலிருந்து விடுதலை செய்தேன். முன்போலவே ஆனூர் வட்டத்திற்கு உம்மைப் பாளையக் காரராக நியமித்துள்ளேன்," என்று கூறிப் புலவரைப் பார்த்து, "பொய்யில்லாப் புலவரே, உங்கள் பேரருளை மிகவும் போற்றுகின்றேன்! உங்களுக்கு வேண்டுவன யாவை? அவற்றைக் கூறும்படி உங்களைக் கேட்டுக் கொள்கின்றேன்," என்று புகழ் மலரும் சொற்களை அடுக்கினார் இராமப்பையர்.

"சிறையிலிருக்கும் மற்றப் பாளையக்காரரையும் விடுதலை செய்யப் பெரிதும் உம்மை வேண்டுகின்றேன். இதுவே நான் விரும்பும் பரிசில்" என்றார் புலவர். அவ்வாறே அவர்களை விடுதலை செய்தார் இராமப்பையர். அங்கிருந்த சிலர் இராமையரைப் புகழ்ந்தனர்; மற்றுஞ் சிலர் மன்றாடியாரைப் போற்றினர்; பலர் அவர் தம் மனைவியாரைப் போற்றினர்; மற்றுஞ் சிலர் புலவரைக் கொண்டாடினர்,

"கொங்கனில் இராமப்பையனதி காரஞ்செய் காலத்திலே
கங்கு விராப்பகல் சர்வசங் காரஞ்செய் காலத்திலே
சிங்கநற் சம்பந்த சர்க்கரை தேவி திருக்கழுத்தின்
மங்கிலி யந்தன்னைத் தந்தாள் தமிழ்க்கவி வாணருக்கே.
"வாணன் உரைத்திட மால்ராமப்பையன்மனமகிழ்ந்து
வேணது கேளெனச் சம்பந்த சர்க்கரை வேளொனுமிவ்
வீணரைக் காவல் விடவென்று கூறிட விட்டிடலும்
தானுமென் றிம்முடிக் காணிக்கைச் சாசனந் தந்தனரே."

என்று பாடுகிறது கொங்கு மண்டல சதகம்.

# 5. தஞ்சைவாணன்

[தமிழ் நாவலர் சரிதை, தனிப்பாடல்கள்—இவற்றைத் துணையாகக் கொண்டு இவ்வரலாறு எழுதப்பட்டது.]

## பொன் தேங்காய்ப் பரிசு

வையை என்னும் பொய்யாக் குலக்கொடி தவழ்ந்து விளையாடுவது பாண்டி நாடு. இரு கரைகளிலும் உள்ள மலர்களைப் பறிக்க அவள் தன் அலைகளாகிய கைகளை நீட்டுவாள். தங்களை அவள் பிடிக்க வருகிறாள் என்று மீன்கள் துள்ளிக் கரைகளில் குதிக்கும். அவை வெண்மணலில் பதித்த வெள்ளித் தகடுகள் போலத் தோன்றும். 'செந்தமிழ் வளர்த்த பாண்டி நாடு,' என்று வையையாம் பூங்கொடி அந்நாட்டைப் பாதுகாக்கின்றாள். 'முத்தமிழ் வளர்த்த நாடு' என்று அவள் முத்தும் கொடுக்கின்றாள்.

வையையாற்றின் கரையில் உள்ளதோரூர் தஞ்சாக்கூர். அந்த ஊரில் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் வாணர் மரபில் பிறந்தவன் தஞ்சைவாணன். அவனது இயற்பெயர் தெரியவில்லை. அவன் இளமையிலேயே போர்வீரனாய்த் தமிழ்ப் பத்தனாய் அறிவின் விளக்காய்ச் சிறந்து விளங்கினான். குலசேகரதேவ பாண்டியன் வாணனைப் பற்றிக் கேள்வியுற்றான். அவனது ஏவலாளன் ஒருவன் வாணனிடம் சென்று வணங்கி, "குலசேகரதேவ பாண்டியர் உங்களை அழைத்து வரச் சொன்னார்," என்றான்.

வாணன், மதுரையை அடைந்தான். அவனை வரவேற்பது போல மீனக்கொடி அசைந்தது. வாணன் பாண்டியனைக் கண்டு வணங்கி நின்றான். பாண்டியன் அவனை நோக்கி, "உன்னை என் படைக்குத் தலைவனாகச் செய்துள்ளேன்." என்றான். "அரசே, மிகவும் மகிழ்ச்சி ! அதனை நான் ஏற்றுக் கொள்கிறேன்," என்று முகம் மலர்ந்து வணங்கினான் வாணன். கரும்பு தின்னக் கசக்கும் என்பார்களோ ?

வாணன், படைகளுக்குப் பல வகைப் பயிற்சி அளித்தான் ; படைகள் மகிழ அவற்றிற்கு வேண்டிய வசதிகள் செய்தான். படைகள் அவனைத் தம் உயிரெனக் கருதின. ஓய்வு நேரத்தில் அவன் தமிழ்க்கலை கற்றான் ; அதில் நூலியற்றும் தகுதி பெற்றான். செந்தமிழின் சுவை அவனுக்குத் தேனென இனித்தது. அதனால அவன் புலவர்களைப் போற்றினான் ; உயிரெனக் காத்தான். ஒழுக்கமும் இன்பமும் தருவோர் புலவர் அல்லரோ ?

தஞ்சைவாணனது அருஞ்செயலும் ஆற்றலும் பாண்டியனைக் கவர்ந்தன. ஒரு நாள் அவன் தஞ்சை வாணனை அழைத்து, "உன்னைத் தென்மாறை நாட்டுக்குத் தலைவனாக்கியுள்ளேன். அதற்கு நீயே இன்று முதல் தலைவன்," என்றான் ; [தென்மாறை நாடு என்பது கொற்கை, வல்லம், தஞ்சாக்கூர், மல்லை என்னும் நான்கு ஊர்களுக்கும் இடையிலுள்ள நாடு ]. "செந்தமிழ் வளர்க்கும் மன்னரே, வணக்கம் ! நீங்கள் என்னிடத்துக் கொண்ட அன்பின் செயல் இது. நான் அந்நாட்டை நன்கு பாதுகாப்பேன்,"

என்றான் அவன். பாண்டியன் மகிழ்ந்தான். தஞ்சை வாணன் தென்மாரை நாட்டுக்குத் தலைவனாகி அந்நாட்டை நன்கு பாதுகாத்தான்; அவன் ஒவ்வோர் ஊருக்கும் சென்று, குடிகளின் குறையைக் கண்டு நீக்கினான்.

பாண்டியனுக்கும் சோழனுக்கும் போர் மூண்டது. அப்போர்க்குத் தஞ்சைவாணனை அனுப்பினான் பாண்டியன். வாணன் நால்வகைப் படைகளையும் திரட்டிக் கொண்டு போர்க்களம் புகுந்தான். முரசு முழங்கிற்று. போர் தொடங்கிற்று. விற்கள் வளைந்தன. அம்புகள் பறந்தன. அடுத்த கணத்தில் பல உடல்கள் நிலமகள் மடியில் தஞ்சமாய் விழுந்தன. விழுந்த இடங்களில் குருதி குட்டைகள் போலத் தேங்கிற்று. அது நிலமகள் ஆடையின் செவ்வலரி மலர்கள் போலத் தோன்றிற்று. குருதி தோய்ந்ததால் குதிரைகளின் கருங்குளம்புகள் செங்குளம்புகளாயின; யானைகளின் வெண்கொம்புகள் செங்கொம்புகளாயின.

அவ்வாறு போர் பல நாள் நடந்தது. "இன்றே இப்போரை முடிக்க வேண்டும்," என்று விரும்பினான் வாணன். அன்று அவன் பெரும்படைகளை ஏவிக் கடும் போர் புரிந்தான். சோழன் படைகள் தோற்றோடின, வெற்றி முரசு முழங்கத் தஞ்சைவாணன் தன் நாட்டுக்குத் திரும்பினான். அன்று பாண்டி நாடு முழுதும் வெற்றி விழா நிகழ்ந்தது. அந்நாட்டு மக்களுக்கு மகிழ்ச்சி மலர்ந்தது. பாண்டியன் மகிழ்ந்தான். தஞ்சைவாணன் பாண்டியன் அரண்மனையில் பல நாள் இருந்த பின் தஞ்சாக்கூரை அடைந்தான். அவனை வரவேற்று மகிழ்ந்தாள் அவன் மனைவி.

சில நாள் சென்றன. ஒரு நாள் அவன் மனைவி செந்தாமரைப் பூவில் வாளை மீன் கிடப்பது போல, தன் மலர்க்கையில் சுவடி ஒன்றை ஏந்தி நின்ருள். வாணன் அவளை நோக்கி, "என்ன சுவடி இது?" என்று அன்பொழுக வினவினுன்.

"இது சுவடி அன்று; உங்கள் புகழ் மணக்கும் மலர்; இன்பத்தேன் சொட்டும் கனி; தமிழன்னையின் சூளாமணி; அறிஞர் பருகும் அருவி நீர். உங்கள் பெயரே இதன் பெயர். இதனை இயற்றியவர் பொய்யாமொழிப் புலவர். அவர் இந்நூலோடு உங்களைக் காண வந்தார். அப்போது நீங்கள் போர்க்களத்தில் இருந்தீர்கள். நான் இந்நூலைப் படித்துப் பார்த்தேன். மிகமிக அருமையாய் இருந்தது. உடனே புலவரது திருவாக்கிஞல் இந்நூலின் பொருளைக் கேட்கவேண்டும் என்னும் பேராவல் என்னைத் துன்புறுத்திற்று. புலவர்க்கு உடனே பொருளுதவி செய்ய வேண்டும் என்னும் ஆசையும் என்னை அலைத்தது. புலவரை இந்நூலை அரங்கேற்ற வேண்டினேன். அவர் அரங்கேற்றினுர்; எல்லோரும் இன்புற்ருேம். ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் ஒவ்வொரு பொன் தேங்காய் புலவர்க்குப் பரிசிலாக உருட்டினேன்," என்று வாணன் மனைவி முகத்தில் புன்னகை பூத்துக் கூறி அந்நூலை அவன் கையில் கொடுத்தாள்.

தஞ்சைவாணன் இரண்டொரு செய்யுளைப் படித்தான். அவனது உடல் பூரித்தது; முகத்தில் புன்னகை பூத்தது. அவனது அகன்ற நெற்றியில் ஏறிய விற்புருவங்கள் அங்கேயே நின்றன. அவன் சிறிது நேரம் ஒன்றும்

பேசவில்லை. பின்பு, "உனது கலை ஆர்வத்தையும், நீ புலவரிடத்துக் கொண்ட பேரன்பையும் போற்று கின்றேன்! ஆனால், அந்த அரங்கேற்றத்தை நான் கேட்காதபடி செய்துவிட்டாய். அதனால், என் மனம் துன்புறுகின்றது," என்றான் தஞ்சைவாணன்.

அவன் மனைவியின் கண் மலர்களிலிருந்து சில நீர்த் துளிகள் மையைக் கலைத்துக்கொண்டு மஞ்சள் பூசிய முகத்தில் உருண்டு ஆடையில் மறைந்தன. "நீங்கள் என் மனக்கோயிலிலிருந்து அரங்கேற்ற இன்பத்தை அனுபவித்தீர்கள். ஏன் வேறு பிரித்துக் கூறுகின்றீர்கள்? இருவரும் ஒன்றுதானே?" என்றாள் அவள்.

"பால் ஒன்றுதான். அது இரண்டு பொற்குவளையில் இருப்பது போலாவோம் நாம். பொய்யாமொழிப்புலவரை வரவழைத்து மற்றொரு முறை இந்நூலை அரங்கேற்றச் சொல்லி இன்புறுவோம்," என்று தஞ்சைவாணன் கூறினான். அதற்கு அவன் மனைவி உடன்பட்டாள். தெவிட்டாத இன்பமன்றோ செந்தமிழ் இன்பம்!

தஞ்சைவாணன் தன் அமைச்சர்களிடம் பொய்யா மொழிப் புலவரை வரவழைக்குமாறு கூறினான். அமைச்சர் ஏற்ற ஏற்பாடு செய்தனர். போகிகள் பல்லக் கோடும் விருதுகளோடும் வயிரபுரத்தை நோக்கிப் புறப் பட்டார்கள். மலர்களிலிருந்து தேன் ஒழுகப் புதுநீர் வந்ததென்று தவளைகள் குதிக்கும் பொய்கைகளையும் வளர்ந்த பயிர்களையும் நிறைந்த நீரையும் உடைய கழனி களையும் விண்ணளாவிய மாளிகைகள் சூழ்ந்த நகர்களை யும் கடந்து, வயிரபுரத்தை அடைந்து, அவர்கள் பொய்யா

மொழிப் புலவரை வணங்கி, " புலவரே, தஞ்சைவாணர் மனைவியார் உங்களுக்குப் பரிசாக அளித்த நானூறு பொன் தேங்காய்களோடு உங்களைத் தஞ்சைவாணர் அழைத்துக்கொண்டு வரச் சொன்னார்,'' என்று கூறினார்.

பொய்யாமொழிப் புலவர் நானூறு பொன்தேங்காய்களையும் பொற்பல்லக்கில் அடுக்கித் தாமும் அப்பல்லக்கில் அமர்ந்தார். பொன் தேங்காய்களின் ஒளியாலும் பொற்பல்லக்கின் ஒளியாலும் புலவர் பொற்பதுமை போலக் காணப்பட்டார். தமிழ்க்கலையின் பண்பு அவரது முகத்தில் பொலிந்தது. இயற்கைப் பொருள்களின் அழகைக் கண்களாற்பருகி வருணித்துக்கொண்டே பல நாள் கடந்து அவர் தஞ்சாக்கூரை அடைந்தார். தஞ்சைவாணன் அரச விருதுகளோடு புலவரை வரவேற்று வணங்கினான். புலவர் அவனை வாழ்த்தினார். அவன் தன் மனைவி புலவர்க்களித்த பொன் தேங்காய்களை வாங்கிக்கொண்டான். கண்டோர் அவனை வெறுத்தனர்.

அன்று புலவர்க்கு அரண்மனையில் அருமையான விருந்து நடந்தது. அவரோடு கூடி உண்டு களித்தான் வாணன். பின் அவன் பொய்யாமொழியாரை நோக்கி, "முன் நீவிர் தஞ்சைவாணன் கோவையை அரங்கேற்றினீராம். அப்போது நான் கேட்டு இன்புறவில்லை. இப்போது கேட்டு இன்படைய விரும்புகின்றேன். என்மீது அருள் புரிந்து, என் எண்ணத்தை ஈடேற்றுவீராக!'' என்றான் தஞ்சைவாணன். 'தேனை உண்ணுதற்கு மலர்கள் வண்டுகளை அழைக்க வேண்டுவதில்லை,' என்று தம் உடன்பாட்டைத் தெரிவித்தார் புலவர்.

தஞ்சைவாணன் கலைஞனாகையால், புலவர் கூறியதன் உட்பொருளையறிந்தான்.

பட்டி மண்டபம் தோரணங்களாலும் மலர்களாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டது. அதில் புலவர்க்கு உயரமான ஆசனம் அமைக்கப்பட்டது. அதனருகில் தஞ்சைவாணனுக்கு ஆசனம் அமைக்கப்பட்டது. அவற்றின் மேல் இரத்தினக் கம்பளங்கள். அவற்றின்மேல் மலர்ச் செண்டுகள். பட்டி மண்டபத்தில் புலவர்களும் கலைஞர்களும் குழுமி இருந்தனர். பொய்யாமொழிப் புலவர் ஆசனத்தில் அமர்ந்து தஞ்சைவாணன் கோவையை அரங்கேற்றத் தொடங்கினார். அவருக்கு இரு பக்கங்களிலும் இருந்து இருவர் கவரி வீசினர். புலவரது சொற்பொழிவைக் கேட்டு அவையோர் மகிழ்ந்தனர். அவர்களைவிட வாணன் மகிழ்ந்தான்.

முன் மன்னன் புலவர்க்குக் கொடுத்த பொன் தேங்காய்களை முன் வாங்கிக்கொண்டான் அன்றோ வாணன்? அவற்றின் மூன்று கண்களிலும் மூன்று இரத்தினங்களைப் பதித்து ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டி மகிழ்ந்தான் வாணன். அந்நானூறு தேங்காய்களும் நானூறு முக்கண் கடவுளர் போலக் காட்சி அளித்தன. அவையோர் மகிழ்ச்சியால் தம்மை மறந்தனர் 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சுதானே?'

பொய்யாமொழிப் புலவர் சில நாள் அங்குத் தங்கி இருந்து பின் வாணனை விடை கேட்டார். வாணன் வருந்தி, 'என்னைப் பிரியமாட்டீர் என்றிருந்தேன்,'

என்றான். 'நான் தமிழ் நாடு முழுதும் சென்று அறம் உரைத்து மக்களை நல்வழிப்படுத்த வேண்டும். அதன் பொருட்டு விடை தாரும்,' என்றார் பொய்யாமொழியார். வாணன் அடைந்த துன்பம் அவன் வாய்க்குப் பூட்டுப் போட்டுவிட்டது. அதனால், அவன் கைகளைக் குவித்துத் தலையசைத்து விடை கொடுத்தான். புலவர் அவனை வாழ்த்திச் சென்றார். அவர் மறையும் வரை தஞ்சை வாணன் அவரைப் பார்த்துக்கொண்டே இருந்தான். அவனுடைய குவித்த கைகள் அப்படியே நின்றன. இமைகள் அசையவில்லை. ஒழுகிய ஆனந்தக் கண்ணீரும் நிற்கவில்லை. புலவர் மறைந்தார். தஞ்சைவாணன் உணர்ச்சி பெற்றான். 'மக்களுடைய அருமையைப் பெற்றவரோ அறிவர்.'

# 6. நந்திவர்மன்

[கல்வெட்டுக்கள், நந்திக்கலம்பகம், செவிவழிச் செய்தி இவற்றின் துணையால் இவ்வரலாறு எழுதப்பட்டது.)

## வெற்றிச்சுடர்

முடியுடைத் தமிழ் மூவேந்தரே அன்றிப் பல்லவர்களும் நம் தமிழகத்தின் சில பகுதிகளைச் சில காலம் ஆண்டனர். அவர்களுக்குத் தலைநகர் காஞ்சீபுரம்; துறைமுகம் மாமல்ல (மகாபலி)புரம், அங்குள்ள கலங்கரை விளக்கம் அவர்கள் காலத்து வாணிகச் சிறப்பை இன்றும் சொல்லிக்கொண்டிருக்கின்றது. பல்லவர்களின் கலை ஆர்வத்தை அங்குள்ள கற்சிற்பங்கள் கூறுகின்றன. மாமல்லபுரம் கலைக் கோயிலாகக் காட்சி அளிக்கின்றது. பல்லவர் தமிழரல்லர். ஆயினும், அவர்கள் தமிழ்ப்பண்பில் வளர்ந்து, தமிழ் அரசரின் நீதிப்படி உலகை ஆண்டு, தமிழராய் வாழ்ந்தார்கள்.

பல்லவர்களுள் பலர் பெருவீரராயும் கலைஞராயும் விளங்கினர்; கண்களை இமைகள் காப்பது போல நாட்டைக் காத்தனர். பல்லவர்களுள் ஒருவன் தந்திவர்மன். அவன் கி. பி. 775 முதல் 825 வரை ஆட்சி புரிந்தான். அவன் மனைவி அங்கள நிம்மடி என்னும் அரிவை. அவ்விருவரின் அருந்தவப் பயனாய் அவர்களுக்கு மகனாய்ப் பிறந்தான் நந்தி வர்மன்.

தந்தி வர்மனுக்குப் பின் நந்திவர்மன் கி. பி. 825 முதல் 850 வரை ஆட்சி புரிந்தான். தன் தந்தையின் காலத்தில் பல்லவநாடு அளவிற்குறைந்தது அவனுக்கு அவமானமாய் இருந்தது. அவன் ஆட்சிக்கு வந்ததும் அவன் செய்த முதல் முயற்சி, தன் தந்தை இழந்த நாடுகளைப் பெறவேண்டும் என்பது. அதனால், அவன் படைகளைப் பெருக்கி, புதிய போர்ப்பயிற்சி அளித்து, நாட்டு உணர்ச்சியைத் தூண்டினன்.

இராட்டிரகூட மன்னனான மூன்றாம் கோவிந்தனுக்குத் தந்தி வர்மன் திறை கொடுத்துக்கொண்டு வந்தான். கோவிந்தன் இறந்த பின் அவன் மகன் முதலாம் அமோக வர்ஷன் கி. பி. 814ல் அரசனானன். அவனுக்கும் தந்தி வர்மன் திறை கட்டிக்கொண்டு வந்தான். நந்தி வர்மன் கி. பி. 825ல் அரசனானதும், அமோக வர்ஷன் மீது போரிட்டு வெற்றி பெற்றான். அப்போர் குருக்கோட்டில் நடந்தது. துங்கபத்திரை ஆற்றங்கரையில் உள்ளது குருக்கோடு. அமோக வர்ஷன் நந்தியின் வீரத்தைப் பாராட்டி அவனுக்குத் தன் மகள் சங்கா என்பவளை மணம் செய்து கொடுத்தான். நந்தி வர்மன் வெற்றியோடும் சங்கா என்பவளோடும் மகிழ்ச்சியுற்றுக் காஞ்சீபுரத்தை அடைந்தான்.

சோழநாடும் தொண்டைநாடும் தந்தி வர்மன் காலத்தில் பல்லவர்க்கு உட்பட்டிருந்தன. முதலாம் வரகுண பாண்டியன் தந்தி வர்மனோடு போர் செய்து சோழ நாட்டையும் தொண்டை நாட்டின் தென்பகுதி

யையும் கைப்பற்றினன். அவன் இறந்த பின் அவன் மகன் சீமாறன் என்பவன் கி. பி. 830ல் பட்டம் எய்தினன்.

நந்தி வர்மன் வடநாட்டில் வெற்றி பெற்றதைக் கேள்வியுற்றான் சீமாறன். "என்னோடு நந்தி வர்மன் போர்க்கு வருவான்,' என்று கருதி, சேரசோழரோடு நந்தி வர்மனைத் தாக்கினன். அப்போர் வடவார்க்காட்டு மாவட்டத்தில் வந்தவாசியை அடுத்த தெள்ளாறு என்னும் ஊரில் நடந்தது. அது மிகப் பெரிய போர், அப்போரைக் கல்வெட்டுக்கள் சிறப்பிக்கின்றன; புலவர் வருணிக்கின்றனர்; சரித்திர ஆசிரியர் வியக்கின்றனர்.

ஆற்றுவெள்ளமும் அருவிவெள்ளமும் ஒன்றுகூடினாற் போல இரு படைகளும் கை கலந்தன. படைகளின் ஆரவார இடி இடித்தது. மேகத்திலிருந்து மின்னல்கள் வருவதுபோல, உறைகளிலிருந்து ஆயுதங்கள் வெளியே வந்தன. அடுத்த கணத்தில் எங்கும் குருதி மழை! போர்க்களம் செங்களமாயிற்று. மழை பெய்த பின் குடைக்காளன்கள் நிலத்தில் பூப்பது போல, போர்க் களத்தில் வீரர்களின் தலைகளும் குதிரைகளின் தலை களும் யானைகளின் தலைகளும் தோன்றின. காளான் களைப் பசுக்கள் இடறுவது போல மாளாத குதிரைகள் அத்தலைகளை இடறின. செவ்வானத்தின் இடை யிடையே தோன்றும் வெண்ணிறம் போலச் சிதறிய மூளைகள் தோன்றின.

அப்போரில் நந்தி வர்மன் வெற்றியடைந்தான். அதனால் அவன் 'தெள்ளாறு எறிந்த நந்தி வர்மன்' எனப்

பட்டான். சீமாறன் முதலியோர் தோற்றோடினர். அவர்களைத் துரத்திச் சென்றான் நந்தி வர்மன். கடம்பூர், வெறியலூர், வெள்ளாறு, பழையாறு முதலிய இடங்களில் பகைவர் அவனை எதிர்த்தனர். அவர்களது எதிர்ப்பு, காற்றினை எதிர்த்த பஞ்சுபோலாயிற்று. பாண்டி நாட்டின் எல்லைப்புறத்திலுள்ள கோட்டையில் பகைவர் ஒளிந்துகொண்டனர். தமிழகத்தைத் தன் குடைக் கீழ்க் கொணர்ந்து, வெற்றிக் கொடி நாட்டிப் பெருமிதத்தோடு காஞ்சிக்குத் திரும்பினான் நந்தி வர்மன்.

அவனது முகத்தில் வெற்றிக்களிப்புப் பூத்தது; அகத்தில் மகிழ்ச்சி மலர்ந்தது; தோள்கள் பூரித்தன. அவன் வடநாட்டிலும் தென்னாட்டிலும் வெற்றி கொண்டதால், "குமரிக் கொண்கன், கங்கை மணாளன்" என்று நந்திக்கலம்பகம் அவனைப் புகழ்கின்றது.

நந்தி வர்மன் மாற்றாந்தாய்க்கு நான்கு ஆண் மக்களிருந்தனர். அவர்கள் அவனுக்குத் தம்பியர். அவர்கள் தங்களுக்கு அரசு வேண்டுமென்று வாதாடினர். நந்தி வர்மன் கொடுக்க மறுத்தான். அதனால், அவர்கள் தமிழ் மூவேந்தரின் துணை பெற்றுப் போரிட்டுத் தோற்றனர்.

'எவ்வகையிலாயினும் அரசு பெற வேண்டும்,' என்று அவர்கள் பேருறுதி கொண்டனர்; அதற்குரிய வழிகளை ஆராய்ந்தனர். நந்தி வர்மனைத் தொலைக்க அவர்களுள் ஒருவன் மந்திர வித்தையைக் கற்றான்; மற்றொருவன் தந்திரக் கலையைப் பயின்றான்; வேறொருவன் படைக்கலப் பயிற்சி பெற்றான்; ஏனையோன் தமிழ்

படித்துக் கவிபாடக் கற்றான்; அதில் அறம் வைத்துப் பாடவும் அவன் நன்கு கற்றான்.

முதல் மூவரும் தாம் தாம் கற்ற கலைகளால் நந்தி வர்மனைக் கொல்லப் பெருமுயற்சி செய்தனர். அம்முயற்சி கடலில் கரைத்த புளியாகிவிட்டது. அவர்கள் செய்வ தறியாது திகைத்தனர். கவிபாடக் கற்றவன் அவர்களை நோக்கி, "மந்திர மகிமையாலும் தந்திர முயற்சியாலும் வாள் வலியாலும் நந்தி வர்மனைத் தொலைக்க முடியாது. நானறிந்துள்ளேன் அவனைத் தொலைக்கும் வழி. நந்தி முத்தமிழ் கற்றவன். தமிழே அவனது உயிர். தமிழ்ப் பாடல்களைக் கேட்டு அவன் சொக்கிப் போவதும் உண்டு. நச்செழுத்துக்களை அமைத்து, அவன்மேல் ஒரு நூலியற்றி, அவன் அதனைக் கேட்குமாறு செய்து, நான் அவனைத் தொலைத்துவிடுவேன். இதுவே அவனை ஒழிக்கும் வழி," என்றான். மற்ற அவனுடைய சகோதரர் களும் அதற்கு உடன்பட்டனர்.

நந்தி வர்மனைக் கொல்லுதற்கென்றே கவர்படு பொருள் தோன்ற வசை வைத்து அவன்மேல் அவன் சில பாடல்களை இயற்றினான். "இப்பாடல்களை நந்தி வர்மன் கேட்கும்படி செய்வது எப்படி ? நான் அவன் சகோதரன் என்று அவன் தெரிந்துகொள்ளக் கூடாது. மற்றவரும் அறிந்துகொள்ளக் கூடாது," என்று புகையை மறைத்து ஒளி விடும் விளக்குப் போல அவன் முனிவன் கோலம் கொண்டான்.

"செந்தமிழ்ப் பாடலோ, இயற்கையில் தித்திக்கும் தேனமுதம்! அப்பாடலோடு யாழும் சேரின் இன்பத் தைச் சொல்லவும் வேண்டுமோ!" என்று அவன்

சுரைக்குடுக்கையால் சிறந்த யாழ் ஒன்று செய்தான். பின்பு அவன் அதனைத் திருத்தி ஒரு பாடலை யாழோடு இயைத்துப் பாடிப் பார்த்தான்.

"நான் பாடிய பாடலும் செய்த யாழும், பாலோடு தேன் கலந்தது போன்றன்றோ விளங்குகின்றன! பாடலும் யாழும் நந்தியாம் அசுணமாவைக் கொல்லும்," என்று இன்புற்றான் அப்புலவன். பின்பு நந்தியின் தலைநகராம் காஞ்சிபுரத்தை அவன் அடைந்தான். நந்தியின் இடபக் கொடி, "நீ வர வேண்டா," என்று மறித்துக் கை காட்டியது. மணம் வீசிக்கொண்டிருந்த இளந்தென்றல் நின்றுவிட்டது. ஆகாயவாணி சினந்து உடல் சிவந்தாள். பறவைகள் அஞ்சிக் கூட்டிற்குள் புகுந்தன. இரவு என்னும் நங்கை இருளாடையைப் போர்த்துக் கொண்டு வந்தாள்.

முனிவன் போலக் கோலம் கொண்ட நந்தியின் தம்பி சில நாள் காஞ்சியில் பிச்சை ஏற்றுக் காலம் கழித்தான். அவன் சில பாடல்களை அவன் பிச்சை ஏற்கும் போது இசையோடு யாழில் இசைத்துப் பாடுவதுண்டு. "யாழ்தான் பாடியதோ, முனிவர்தாம் பாடினரோ!" என்று கேட்போர் வியப்பர். தெருவில் சென்று கொண்டிருப்பவர் கூட்டமாகக் கூடிவிடுவர். "இம் முனிவரது குரலை இறைவர் எதனைக் கொண்டு எவ்வாறு படைத்தாரோ!" என்று சிலர் இறைவரை நினைந்து உருகுவர்.

"அழகான ஒரு மாளிகை. அதில் பல அடுக்கு மாடிகள். அது ஒரு கணிகையின் மாளிகை. போலி

முனிவன் அதன் முன் நின்று சில பாடல்களை இசையோடு யாழிலிட்டு அனுபவித்துப் பாடினான். அப்பாடல்கள் அக்கணிகையின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவள் முத்தமிழ் கற்ற ஓவியம் ; ஆடும் பாவை ; பாடும் குயில் ; இளமையின் எழில். "பாடுகின்றவன் விண்ணுலகத்துக் காந்தருவனோ! நாரதனோ! இனிமையான பாடல் ! அருமையான குரல் ! நாதம் நன்கமைந்த யாழ் !" என்று அவள் இல்லத்துள்ளிருந்து ஓடி வந்து பார்த்தாள் ; "இவர் முத்தமிழ் கற்ற முனிவர்," என்று அடி வணங்கி, "முனிவரே, நீங்கள் அடியாள் இல்லில் எழுந்தருளி மறுமுறை இப்பாடலைப் பாட வேண்டுகின்றேன். நீங்கள் பாடியது திருத்தமான செந்தமிழ்ப் பாடல். அப்பாடல் உங்கள் யாழில் அழகாக விளையாடியது ; என் உள்ளத்தில் இடம் பெற்றது. இவ்வீட்டிற்குள் எழுந்தருள்க," என்று அவள் வேண்டினாள்.

முனிவன் அவளது இல்லினுட்சென்று சில பாடல்களைப் பாடினான். கணிகை கேட்டு இன்பக் கடலுள் மூழ்கினாள் ; மூழ்கிச் சில பாடல்களை ஏட்டில் எழுதிக் கொண்டாள். மேலும் பல பாடல்களைக் கேட்டு மகிழ அவளது உள்ளம் அவாவிற்று.

"அடிகளே, நீங்கள் நாள்தோறும் அடியாள் குடிசையில் எழுந்தருளிப் பாட வேண்டுகின்றேன். செந்தமிழ்க் கடலிலிருந்து சில முத்துக்களையே பெற்றேன். மேலும் பல முத்துக்களைப் பெற விரும்புகின்றேன். உங்கள் பாடல்களோ, கடலிலிருந்து எடுக்காத அமுதம்; பசுவிலிருந்து கறக்காத பால்; கொம்பிலிருந்து எடுக்காத

தேன்,'' என்று புகழ்ந்து அம்முனிவனுக்குப் பல பரிசில் கொடுத்தனுப்பினுள்.

போலி முனிவன் நாள்தோறும் கணிகையின் வீட்டிற்குச் சென்று பாடல்கள் பலவற்றை அவளுக்குச் சொல்லிக் கொடுத்தான். அவள் அவற்றைப் பாடி மகிழ்வது வழக்கம். ஓரிரவு ஊரடங்கிவிட்டது. குரைக்கும் நாய்களின் ஓசையன்றி வேருேர் ஓசை இல்லை. வெள்ளித் தட்டுப்போல விண்ணில் வெண்ணிலவு தண்ணெளியைப் பொழிந்துகொண்டிருந்தது. இளந்தென்றல் மணத்தை வாரி இறைத்துக் கொண்டிருந்தது. ஊர் உறங்கிற்று. அக்கணிகையின் கண்கள் உறங்கவில்லை.

அவள், நிலாமுற்றத்தில், வெண்பட்டு ஆசனத்தில், தனிமையில் நந்திக்கலம்பகப் பாடல்களை யாழிலிட்டுப் பாடினுள்; மகிழ்ந்தாள். அத்தெரு வழியே ஊர் காவலர் தங்கள் கடமையைச் செய்து சென்றனர். சென்றவர் அவள் பாடிய பாடலைக் கேட்டு இன்புற்றனர். நந்திவர்மனது தமிழ்ப் புலமையையும் வீரத்தையும் அப்பாடல் சொல்லியதே அதற்குக் காரணம். நந்தி வர்மன் அவர்களுக்கு அரசனல்லவோ! மேலும் மற்ருெரு பாடலைக் கேட்க அவர்கள் தெருவில் நின்றுகொண்டிருந்தார்கள்.

"வானுறு மதியை அடைந்ததுன் வதனம்;
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி;
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்;
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்;
தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்:
செந்தழல் அடைந்ததுன் தேகம்
நானும் என் கவியும் எவ்விடம் புகுவோம்?
நந்தியே நந்தயா பரனே!"

(நந்திவர்மனே, எங்கள் தயாபரனே, நீ இறந்ததால் உன் முகத்தின் தமிழ் ஒளியும் வீரப் பொலிவும் விண்ணில் விளங்கும் வெண்ணிலாவை அடைந்தன! உன் புகழ் அலைகடலில் புகுந்தது! உன் வீரம் காட்டில் வாழ் புலியை அடைந்தது! உனது கொடை கற்பகத்தைச் சேர்ந்தது! உன்னிடத்திலிருந்த செல்வத் திருமகள் திருமாலிடம் குடிபுகுந்தாள்! இவை நீங்கிய பின் உன் தமிழ்க் கோயில் (உடல்) செந்நெருப்பை அடைந்தது! நானும் என் கவியும் எவ்விடம் புகுவோம்?)

இப்பாடலை அவள் பாடி உருகினுள். ஒவ்வோர் அடியையும் பல முறைப்பாடிப் பொருட்சுவைகளை வெவ்வேறு விதமாக அவள் அனுபவித்தாள். அவளுடைய விரல்கள் யாழின் நரம்புகளில் விளையாடின. அவளது குரல், மேல் ஸ்தாயி கீழ் ஸ்தாயிகளில் உலாவின.

இப்பாடலோ, காவலர்க்குத் துன்பத்தைத் தந்தது. "நம் அரசர் இறந்துவிட்டாராமே! எப்போது இறந்தார்? நமக்குத் தெரியவில்லையே! அவரது பொன்னுடல் செந்நெருப்பை அடைந்ததாமே! இறுதியாக அத்திருமேனியைப் பார்க்காத பாவியானேம் நாம்! புலவர்களைப்

பாதுகாத்த புண்ணியர் அவர்!" என்று காவலர் கண்ணீர்விட்டுக் கொண்டே சென்று தம் தலைவனிடம் நிகழ்ந்ததைக் கூறினர்.

அவர்கள் தலைவன், "நம் அரசர் இறந்திருப்பின் உலகறியாது இருக்குமா ?" 'நந்தி இறந்தான்' என்று பாடினவள் பைத்தியக்காரியாய் இருப்பாள்," என்றான்.

"அவள் பைத்தியக்காரியாய் இருந்தால், இனிமையாகவும் அருமையாகவும் திருத்தமாகவும் பாடியிருக்க மாட்டாள். நந்தி வர்மரைக் கொன்று நெருப்பில் எரித்து விட்டார்களாம் !" என்றான் ஒருவன்.

"நம் அரசரைக் கொல்ல இப்போது, இவ்வுலகில் எவரும் இல்லை. கருங்கல்லை எலி தின்னுமா?" என்றான் தலைவன்.

இதனைக் கேட்டுக் காவலர் பெருந்துயரோடு சென்றனர். அதுமுதல் சிந்தனை அலையும் துன்பப் புயலும் தலைவனது உள்ளக்கடலை அலைத்தன.

" உலகம் ஒரு போர்க்களம். காவலர் சொன்னது உண்மையாகவும் இருக்கலாம். எப்பொழுது பொழுது விடியும் ? எப்பொழுது ஐயம் தீரும் ?" என்று காவலர் தலைவன் ஏங்கிக்கொண்டிருந்தான். பறவைகள் திருப்பள்ளி எழுச்சி பாட, கடல் முரசொலிக்க, செங்கதிர்ச் செல்வன் கிழக்கில் தோன்றினன். அரண்மனையில் தியாக முரசு முழங்கிற்று. நந்தி வர்மன் அறம் செய்ய அரண்மனையிலிருந்துவெளியே வந்தான். அவனைக் காவலர் தலைவன் கண்டு மகிழ்ந்தான்.

முன் பத்து நாழிகை வரையிலும் நந்திவர்மன் அறச் செயல்கள் செய்தான். பின் நியாய முரசு முழங்கிற்று. நியாயம் வழங்க அரியணையில் வீற்றிருந்தான் நந்தி வர்மன். அவனுக்கருகில் பட்டத்தரசி சங்கா என்பவள் அமர்ந்திருந்தாள். அமைச்சர்களும் புலவர்களும் சான் றோர்களும் அமர்ந்திருந்தனர். குடிகள் தங்கள் குறைகளைச் சொல்லிக்கொள்ள ஒருவரும் அன்று அரசவைக்குச் செல்லவில்லை. நோயிருந்தால்தானே மருத்துவனைத் தேடிச்செல்வர் ?

காவலர் தலைவன் நந்திவர்மனை வணங்கி, " அறத்தைப் பாதுகாக்கும் அரசரே, நேற்றிரவு நம் ஊர்காவலர் இந்நகரைச் சுற்றி வந்தனர். அப்போது கணிகை ஒருத்தி மிக அருமையாகப் பாடினளாம். உங்களது அறம் தவறா வீரமும், நீங்கள் குடிகளைப் பாது காக்கும் பண்பும், உங்களது தமிழ்ப்புலமையும் உங்கள் புலவரைப் போற்றும் பெருங்குணங்களுமே அப்பாடல் களாம். காவலரின் கடமையை மறக்கச் செய்து தம் மையே கேட்கும்படி செய்தனவாம் அப்பாடல்கள். இறுதியாகத் திடுக்கிடும் செய்தியையும் அவர்கள் கேட்டனராம். நீங்கள் இறந்துவிட்டதாகவும் உங்கள் திருமேனியை நெருப்பிலிட்டு எரித்ததாகவும் அவள் இறுதியாகப் பாடினளாம். நம் காவலர் அப்பாடலைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கதறி என்னிடம் வந்து கூறினர். இதுவே அடியேனது விண்ணப்பம்," என்று கூறி உடல் நடுங்கி நின்றான்.

நந்திவர்மனது முகத்தில் புன்னகை பூத்தது. அமைச் சர்கள் அகத்தில் சினத்தீ மிகுந்தது. புலவர்களின்

உள்ளத்தில் திகைப்பு உண்டாயிற்று. நந்தி வர்மன் முகம் மலர்ந்து அமைச்சர்களை நோக்கினன்.

“ஆற்றல் மிக்க அரசரே, இது உங்களிடம் தோற்றோடிய மன்னர்களின் சூழ்ச்சியாய் இருக்கலாம். அன்றி, உங்கள் மாற்றாந்தாய் மக்களின் சதியாகவும் இருக்கலாம். ‘அரசன் இறந்துவிட்டான் என்று வதந்தியைக் கிளப்பினால், உள்நாட்டுக் குழப்பம் உண்டாகும். உண்டானால், பல்லவ நாட்டை எளிதில் கைப்பற்றலாம்,’ என்று அவர்கள் கருதி இவ்வாறு செய்திருக்கலாம்,” என்றான் ஓர் அமைச்சன்.

“கடலைக் கலக்கக் கையினால் முடியாது. நீங்கள் ஏன் கவலைப்படுகின்றீர்கள்? அப்பாடலைப் பாடிய நாடகக் கணிகையை இங்கு அழைத்து வாருங்கள். காலிற் பட்டது சிறு புல்லாய் இருந்தாலும், ஆராய்ந்து பார்க்க வேண்டும்,” என்றான் நந்தி வர்மன்.

ஏவலர் கணிகையின் இல்லத்தை அடைந்து, அவளைக் கண்டு, “நந்தி வர்ம மகாராசா உங்களை அழைத்துக்கொண்டு வர எங்களுக்குக் கட்டளை இட்டுள்ளார்,” என்றனர். அவள், “காரணம் யாது?” என்றாள். “எங்களுக்குத் தெரியாது,” என்றனர் ஏவலர்.

அவளது உள்ளத்தில் அச்சம் உண்டாயிற்று. “ஏன் நான் அஞ்ச வேண்டும்? நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. அரசரோ, நீதி தவறாதவர்; கலைஞருமாவார்,” என்று அவள் ஆடையாலும் அணிகளாலும் தன்னை அலங்கரித்துக்கொண்டாள்.

தங்கப்பதுமை மீது மாலைக்காலத்து மஞ்சள் வெயில் பட்டால் அப்பதுமை எவ்வாறு இருக்குமோ, அவ்வாறு இருந்தது அவளது அழகு மேனி. அவள் பூசிக்கொண்டிருந்த நறுமஞ்சள் ஒளி தங்கப்பதுமைக்கு மெருகு கொடுத்தது போல இருந்தது. பொன்னில் நீல மணியைப் பதித்தது போல முதுகில் பின்னல் தொங்கிற்று. அவளுடைய கண் மீன்கள் பாயும் எனக் கருதி வலை இட்டது போலக் கண்களுக்கு மை தீட்டப்பட்டிருந்தது. அவளது பிறை நெற்றியில் சாந்துப்பொட்டு நீலமணி போல இருந்தது. அவள் தந்தப் பல்லக்கில் ஏறி அரண்மனையை அடைந்து அரசனை வணங்கினாள். நந்தி வர்மன் அவளைப்பார்த்து இவ்வாறு வினவினான்.

"நேற்றிரவு என்னைப் பற்றிப் பல பாடல்கள் நீ பாடியது உண்மையா ?"

"உண்மைதான்."

"முன் பாடியதைப் போலவே அவற்றை இப்போது பாடுக."

உடனே கணிகை யாழை மீட்டித் தன் வீட்டில் பாடிய பல பாடல்களை உருக்கமாகப் பாடினாள். சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்து அது தானாகவே வாயில் விழுந்ததுபோல இருந்தது அது. நந்தி வர்மனும் அவையோரும் இன்பக் கடலுள் மூழ்கினர். நந்தி வர்மன் கணிகையைப் பார்த்து, "நான் இறந்ததாகவும் என் உடலை நெருப்பிலிட்டு எரித்ததாகவும் நீ பாடியதாகக் காவலர் கூறினர். அப்பாடலைப் பாடுக," என்றான்.

"வானுறு மதியை" என்னும் பாடலை இசை இலக் கணப்படி அவள் பாடி உருகினாள். அவளுடைய கண்கள் நீரைப் பொழிந்தன. விரல்கள் யாழொலியைக் கிளப்பின. வாய் தமிழமுதைக் கொடுத்தது. அவளது உடல் ஓவியத்தில் எழுதிய விளக்குப்போல இருந்தது. நந்திவர்மன் இன்பமயமானான். தேனுண்ட வண்டு மயங்கித்தான் கிடக்கும்.

"இவள் பாடிய இறுதிப் பாடலுக்காக இவளுக்குத் தண்டனை கிடைக்கும்," என்று அவையோர் எண்ணினர். ஆனால், நிகழ்ந்தது வேறு. "குயில் போன்ற குரல்! வண்டின் ஒலி போன்ற யாழ்! அமுதம் போன்ற தெய்வத் தீந்தமிழ்ப் பாடல்கள்! இவை மூன்றும் முப்பழம்போ லன்றோ இனிக்கின்றன! பிரமன் தெரியாமல் அன்றோ உன்னைக் கலைத் தெய்வமாகப் படைத்திருப்பான்!" என்று நந்தி வர்மன் அவளைப்பாராட்டி, பொன்னும் மணி யும் பரிசாகத் தந்தான். தமிழ் இன்பத்தால், தான் இறந்துவிட்டதாகப் பாடிய கொடுஞ்செயலையும் அவன் மறந்தான்.

நந்தி வர்மன் கணிகையைப் பார்த்து, "இப்போது நீ பாடிய பாடல்களை நீதான் இயற்றினையோ, அன்றி வேறு யாராகிலும் இயற்றி உனக்குத் தந்தனரோ?" என்று மகிழ்ச்சியோடு வினவினான்.

"இப்பாடல்களை நானியற்றவில்லை. ஒரு முனிவர் இயற்றித் தந்தார். அவர் நாள்தோறும் என் இல்லத் திற்கு வருவார்; சைவமாதவர் அவர்," என்றாள் கணிகை.

"அவர் உன்னிடம் வந்தால் என்னிடம் அழைத்துக் கொண்டு வருக. வராவிடில் தேடி அழைத்துக்கொண்டு வருக," என்று கூறினன் நந்தி வர்மன்.

"உங்கள் கட்டளைப்படி நடப்பேன்" என்று கணிகை அரசனை வணங்கிச் சென்றாள்.

"நீங்கள் அந்த முனிவர் யாரென்றறிந்து அவரை இங்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்," என்று ஒற்றர்க்குக் கட்டளை இட்டான் அரசன். என்றும் செல்வது போல அன்று முனிவன் கணிகையின் சித்திர மாளிகைக்குச் செல்லவில்லை; மறு நாளும் செல்லவில்லை. நாட்கள் பல சென்றன. கணிகையின் ஏவலரும் ஒற்றரும், தெய்வங்கள் எழுந்தருளும் திருக் கோயில்களில் முனிவனைத் தேடினர்; முனிவர்கள் தவம் செய்யும் மடங்களிலும் காடுகளிலும் ஆராய்ந்தனர்; குயில் கூவ மயிலாடும் பூஞ்சோலைகளிலும் பார்த்தனர். முனிவனைக் காணவில்லை. மிகத் துன்புற்றனர்.

பல நாள் கழித்து ஒரு நாள் முனிவன் கணிகையின் இல்லத்திற்கு ஏகினன். கணிகை அவனை வணங்கி மகிழ்ந்தாள். முனிவன் சிறிது நேரம் சிந்தித்து அரண் மனைக்குச் சென்றன்.

இடபக்கொடி பறக்கும் அரண்மனையின் புறவாயி லில் வாளேந்திய வீரர் காவல் புரிந்துகொண்டிருந்தனர். முனிவன் அவர்களைக் கண்டு, "நீங்கள் தேடிக்கொண் டிருந்த முனிவன் உங்களைக் காண வந்துள்ளான் என்று அரசனுக்குத் தெரிவியுங்கள்," என்றன். அரசனது உத்தரவு பெற்று அரண்மனைக்குச் சென்றன் முனிவன்.

அந்த இளந்துறவியின் மேனி பொன்னொளி வீசிற்று. மையை உருட்டி ஒழுகவிட்டது போலக்கருஞ் சடைகள் முதுகில் புரண்டன; அம்முதுகு கொள்ளாமல் மார்பிலும் உருண்டன. அவற்றிற்கு இடையில் நாபிவரை கருநிறத் தாடி தொங்கிற்று. பொன் மேனி முழுதும் தூய வெண்ணீறு. ஒரு கையில் கமண்டலம். மற்றொரு கையில் யோகதண்டம். முகத்தில் செந்தமிழ் ஒளி. அத்தகைய ஒளி உள்ளம் கவரும் கோலத்தோடு அரசவையை அடைந்தான் முனிவன்.

நந்தி வர்மன் முனிவனை வரவேற்று வணங்கித் தன் அருகில் ஆசனம் கொடுத்தான். "முத்தமிழ்ப்போல (இயல், இசை, நாடகம்) உன் முக்கரணம் (மனம், வாக்கு, காயம்) வாழ்க! இறைவர் திருவருள் போல் உன் தமிழன்பு வாழ்க!" என்று முனிவன் வாழ்த்தினான். "கடவுள், சத்தியும் சிவமுமாய் இருத்தல் போல இவர் நல்லிசைப் புலவரும் பெருந்தவ முனிவருமாய் இருக்கின்றார்," என்று எண்ணி மகிழ்ந்தான் நந்தி வர்மன். 'இத்தகைய பெருங்குண அண்ணனை அன்றோ கொல்லப் பாடல்கள் பாடினேன்! பொய்க்கோலம் கொண்டேன்! முன்னே போர் புரிந்தேன்!' என்று எண்ணி உருகினான் முனிவன்.

நந்தி வர்மன் அவனைப் பார்த்து, "இந்நகர்க் கணிகைக்கு என் மீது பல பாடல்களை நீங்கள் இயற்றித் தந்ததாகப் பாடினாள். அவை அப்பொழுது மலர்ந்த மலர்கள்; அன்பில் பழுத்த கனிகள்!" என்றான்.

"அப்பாடல்கள் நான் பாடியவைதாம். அவை அருமையாய் இருக்குமாயின், உங்கள் பெருமையே அதற்குக் காரணம். மேலும் பல பாடல்களையும் இயற்றியுள்ளேன்."

"அப்பாடல்களை உங்கள் திருவாக்கினாலேயே கேட்க விரும்புகின்றேன். என் விருப்பத்தை நிறைவேற்றுங்கள்."

"நான் என் வாயால் நேரில் பாட நீர் உம் காதால் கேட்கக்கூடாது."

"கேட்டால் என்ன?"

"நீர் இறப்பீர்."

"இறப்பு இவ்வுலகியற்கை. மரணத்திற்கு அஞ்சுவோன் மன்னனோ?"

"செந்தமிழ்ப் பாடல்களுக்காகவா உலகாளும் மணிமுடி மன்னர் உயிர் துறப்பது?"

"உங்கள் பாடல்கள் கற்பனைச் சுடர்; வருணனைச் சிகரம்; உண்மைப் பொருட்புதையல்; இன்பக் கடல். அந்த இன்பத்திலேயே நான் உயிர் துறப்பது எனக்கு இன்பம். சிலர் நோயினால் துன்புற்று இறக்கின்றனர். சிலர் தற்கொலை செய்துகொண்டு துடிதுடித்துச் சாகின்றனர். சிலர் மனத்துயரால் மாள்கின்றனர். நான் அவ்வாறன்றி, செந்தமிழ் இன்பத்திலேயே மாள்வேனாயின் நான் செய்த தவம் பெரிதன்றோ? சில ஞானிகளுக்குக் கூட இன்பத்திலிருந்து உயிர் துறப்பது கிட்டுவதில்லை."

"அரசே, விளக்கில் வீழ்ந்து விட்டில் பூச்சி இறப்பது போல நீர் தமிழ் இன்பத்தில் வீழ்ந்து உயிர் துறக்க வேண்டா."

"செந்தமிழ் முனிவரே, உங்களை நான் விடமாட்டேன்; வேண்டுகின்றேன்; வணங்குகின்றேன். நீங்கள் பாடி என் ஆவலைத் தீருங்கள்."

கடல் தன்மேலுள்ள மேகத்தின் இயற்கையால் பல நிறங்களாய்த்தோன்றுவது போல, 'பாடவேண்டும்' என்ற சொல்லால் முனிவனது உள்ளத்தில் பல எண்ணங்கள் தோன்றின. அவ்வெண்ணங்கள் தெளியவில்லை. முனிவன் சிந்தனையில் இருந்தான். அவனுடைய இமைகள் கூட இமைக்கவில்லை. அவன் ஓவியமானான். சிறிது நேரம் சென்றபின், "அரசரே, நீர் நூறு பந்தல் போட வேண்டும். அரசகோலம் பூண்டு ஒவ்வொரு பந்தலிலும் நீர் எழுந்தருளி என் பாடலைக் கேட்க வேண்டும். ஒரு பாடல் முடிந்ததும் அப்பந்தல் எரிந்துவிடும். அவ்வாறே ஒவ்வொரு பந்தலிலும் நிகழும். நூறுவது பந்தலில் ஈம விறகுகள் அடுக்கி ஆயத்தமாக இருக்க வேண்டும். நீர் பிணச்சடங்குகள் எல்லாம் செய்துகொண்டு அந்த ஈமத்தில் படுத்து என் நூறுவது பாடலைக் கேட்க வேண்டும். அப்பாடல் முடிந்ததும் அப்பந்தல் எரிந்து தீ உம் உடலை எரித்து உம்மை விண்ணுலகுக்கு அனுப்பும். இதற்குச் சம்மதமா?" என்றான் முனிவன்.

"முனிவரே, மகிழ்ச்சி! மகிழ்ச்சி! செந்தமிழ் இன்பத்தால் தீயின் வெப்பம் எனக்குத் தோன்றாது. என்னை விண்ணுலகுக்கு அனுப்பிய பின் இப்பொன்னையும் பொருளையும் பரிசாக ஏற்றுக்கொள்ளுங்கள்," என்று நந்தி வர்மன் பெரும்பொருளைப் புலவர் முன் வைத்தான்.

முனிவன் கூறியது போல எல்லாம் செய்யப்பட்டன. முனிவனும் அவன் தம்பி இன்னிசையோடு இன்தமிழ்ப் பாடல்களை நந்திவர்மன்மேல் பாடினன். அவன் கேட்டு இன்ப மயமானன். ஒவ்வொரு பாடல் முடிந்ததும் ஒவ்வொரு பந்தல் எரிந்தது. இறுதியில் நந்திவர்மனுக்குப் பிணைச் சடங்கு செய்யப்பட்டது. அவன் நூருவது பந்தலி லுள்ள சிதையில் படுத்தான். முனிவன், "வானுறு மதியை" என்னும் பாடலைப் பாடி முடித்தான். பந்தல் எரிந்து அரசனது தமிழ்க்கோயிலை (உடலை)ப் பற்றியது. அரசன் தமிழின்பம் நுகர்ந்தவாறே—தமிழணங்கைத் தியா னித்தபடியே—முனிவனது புலமையைப் போற்றியவாறே பொன்னுலகு சென்றான். தமிழுலகை அலங்கரித்த அவன் விண்ணுலகை அலங்கரிக்கச் சென்றான். தமிழ் அமிர்தம் உண்ட நந்தி தேவாமிர்தம் உண்ணச் சென்றான்.

நந்திவர்மனது தமிழ்ப்பேரன்பிற்கு விண்ணும் ஒப்பா காது. விண் நீலநிறமுடையது. கடலும் ஒப்பாகாது. அது உப்பாய் இருக்கிறது. அவனுக்கு அவனே ஒப்பு. அவனது பெரும்புகழே **நந்திக்கலம்பகம்**; தமிழ்ப்பற்றே புகழ்க்கம்பம். தமிழின்பப் பாடல்களுக்காக உயிர் துறந்த பெருமை உலகில் வேறு யார்க்குண்டு? தமிழ் அவனுக் குக் கரும்பெனத் தித்தித்ததோ! பாலெனச் சுவைத்ததோ! தேனென இனித்ததோ! என்னை அடிமை கொண்ட தமிழ்த் தெய்வத்திற்கே அது தெரியும்.

நந்தி வர்மன்மேல் முனிவன் பாடிய பாடல்களின் தொகுதியே **நந்திக்கலம்பகம்.**

# 7. பரராச சிங்கன்

(இலங்கை வரலாறு, தமிழ்நாவலர் சரிதை, பெருந்தொகை, தனிப்பாடல்கள்—இவற்ருல் இவ்வரலாறு எழுதப்பட்டது.)

## சிங்களத்தில் வெற்றி:

சரித்திரத்திற்கு எட்டாத காலமுதல் நானூறு ஆண்டு கட்கு முன்வரை தமிழ்க்கொடி தமிழகத்தில் இறங்காமல் பறந்துகொண்டே இருந்தது. அது கங்கையில் நீராடிக் கைலையில் (இமயத்தில்) பறந்து கண்ணுதற்கடவுளையும் கண்டது; வங்கக் கடல் கடந்து கிழக்கிந்தியத் தீவுகளில விளையாடிற்று; அரபிக் கடலிற்பாய்ந்து அங்கிருந்த தீவில் தோன்றியது; இந்து மகாசமுத்திரத்தைத் தாண்டி இலங்கையில் ஆடிற்று. அது சென்ற காலத்தின் சிறப்பு.

இலங்கையின் ஒரு பகுதி யாழ்ப்பாணம். கனக சூரிய சிங்கையாரியன் கி. பி. பதினும் நூற்ருண்டில் அந் நாட்டிற்கு அரசன். அவன் மகன் பரராசசிங்கன். அவன் தன் நாட்டை அலங்கரித்ததோடன்றித் தமிழ்த் தெய்வத் தையும் அலங்கரித்தான்; புலவர்களின் புகழ் மாலையை அணிந்தான். அவனும் புலவர்களுக்குப் புகழ் மாலை சூட்டினன். அவன் புவி வேந்தனுகவும் கவிவேந்தனுக வும் புகழ்க்கோட்டை கட்டினன். புகழ் பெருதவர் பிறவாதவர்.

பரராசசிங்கன் யாழ்ப்பாணத்தை ஆண்டபோது அதன் மற்ருெரு பகுதியாகிய இலங்கையை விசயவாகு என்னும்

சிங்கள வேந்தன் ஆண்டான். அவன் அடிக்கடி யாழ்ப்பாண எல்லை ஓரங்களைத் தாக்கி, அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு போய்க்கொண்டிருந்தான். எல்லைப் பகுதி மக்கள் மிகத் துன்புற்றார்கள். அண்டை அரசும் மண்டைப் புண்ணும் பெருந்துயர் தரும்.

'விசயவாகுவைத் தொலைத்தே தீரவேண்டும்,' என்று எண்ணினான் பரராச சிங்கன். அவனது போர் முரசம் முழங்கிற்று. வீர இளைஞர் தோள்களைத் தட்டிப் போர்க் கெழுந்தனர். அடுத்த கணத்தில் இலங்கைப் பகுதியில் பெருந்தாக்குதல் நடந்தது. விசயவாகுவும் சினந்து எதிர்த்துத் தாக்கினான். இருவர் படைகளிலும் வீரர் பலர் இறந்தனர். விசயவாகுவின் அம்புகள் பரராசன் முகத்திற் பாய்ந்தன. பொற்சிகரத்திலிருந்து செம்பவளக் குழம்பு விழுவதுபோல, பரராசன் முகத்திலிருந்து குருதி வழிந்தது. அவன் கூரிய அம்பொன்றை ஏவினான். அது விசயவாகுவின் கவசத்தைத் துளைத்து, இருதயத்திற் பாய்ந்து, குருதியைக் குடித்து, உயிரைத் தின்றது. பரராசனது போர் முரசம் வெற்றி முரசாய் முழங்கிற்று.

## நாட்டில் பஞ்சம் :

சில ஆண்டு அமைதிச்சோலையில் இன்பம் மலர அவன் நாட்டை ஆண்டான். மேகத்திற்கு அது பொறுக்க வில்லை. அது தன் கடமை தவறி மழை பெய்யவில்லை. அதனோடு நட்புக்கொண்டான் செங்கதிர்ச்செல்வன். நீரோடிய இடங்களில் எல்லாம் அனலோடிற்று. பறவைகள் பறந்த சோலைகளில் எல்லாம் புழுதி பறந்தது. தானியங்கள் விளைந்த நிலங்களெல்லாம் வெடிப்புக்களாயின.

மக்கள் பசியால் வாடினார்கள். எத்தனை நாளைக்குத்தான் மக்கள் பசியால் வாடுவார்கள்! வாடிய இலைகளையும் வதங்கிய வேர்களையும் தின்றனர். பரராச சிங்கனும் அவர்களைப் போலவே தின்றான்; துன்புற்றான். பஞ்சப் பேயை ஓட்ட அவன் பலவாறு முயன்றான். அவனது முயற்சி முழுத்தோல்வி அடைந்தது.

சோழநாட்டுப் புலவர் ஒருவர் ஈழநாட்டை அடைந்தார்; பஞ்சத்தைக்கண்டு மனம் கலங்கினார். அவர் வாயிற்காவலனை அடைந்து தம் வருகையைப் பரராச சிங்கனுக்கு அறிவித்தார். அவனது உத்தரவு பெற்றுப் புலவர் அவனைக் கண்டார். அவன் அவருக்கு இருக்கை கொடுத்தான். புலவர் அவனைப் பார்த்து, "அரசப் புலவரே, நீங்கள் பெருந்துயரில் மூழ்கியுள்ளீர்கள் என்பதை உங்கள் முகத்தாலறிந்தேன். அத்துயர் குடிகளைப் பற்றியதாகத்தான் இருக்கும்," என்றார்.

"அதற்கு ஐயமே இல்லை. 'குடிகளின் பசியைப் போக்குவேன்' என்று கடல்சூழ் ஆட்சியைக்கேட்டாலும் மகிழ்ந்து கொடுப்பேன்; என்னையே கேட்டாலும் அன்புடன் கொடுப்பேன். குடிகள் பசி இன்றி இருப்பதுவே என் ஆட்சி. நீங்கள் குடிகளின் கடும்பசி ஒழிய வழி ஒன்று சொல்லுங்கள்," என்றான் சிங்கன். அப்போது அவனுடைய கண்கள் அலை இல்லாப்பொய்கை போலத் தோன்றின. 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு.'

"அரசரே, வருந்தாதீர். உமது நாட்டுப் பசிநோய்க்கு மருத்துவர் புதுவைச் சடையனார். அவர் அறத்தின் விளக்கு; புதுச்சேரியில் பிறர்க்காகவே வாழ்கின்றார்.

அவரிடம் ஓரமைச்சரை அனுப்புங்கள். வள்ளல் முகம் மலரும். உங்கள் நாட்டுக் குடிகளின் வயிறும் குளிரும்,' என்று புலவர் கூறினார்.

"செந்தமிழ்ப் புலவரே, நீங்கள் நற்செய்தி கூறியதற்கு வணக்கம்! கடலில் கட்டுமரம் கவிழ்ந்தவனுக்குக் கலங்கரைவிளக்கம் போலானீர். சடையப்பவள்ளல் கொடுக்கப்போகும் உணவுப்பொருள்களுக்கு நான் பெரும் பொருள் கொடுப்பேன்," என்று பரராச சிங்கன் கூறினான்.

"நீங்கள் செல்வப்பொருள் தருவதாகச் சொன்னால் அவர் உணவுப்பொருள் தரமாட்டார். அவர் வர்த்தகர் அல்லர்; வள்ளல். அவர் அறத்திற்காகத் தானியங்களைச் சேர்த்து வைத்திருக்கின்றாரேயன்றி, விற்பனைக்கு அன்று," என்றார் புலவர்.

"நான் அவரிடம் இனமாக உணவுப்பொருள் பெறுவது உயர்வன்று. உயர்வை நோக்கினால் குடிகள் மடிவார்கள். நீங்கள், கூறியபடியே நான் செய்வேன்," என்று அரசன் கூறிப் புலவர்க்குப் பெரும்பொருள் கொடுத்தனுப்பினான். அவனது உள்ளம் குளிர்ந்தது.

அன்றே ஓரமைச்சனைப் புதுவைச் சடையப்பரிடம் பரராச சிங்கன் அனுப்பினான். அமைச்சன் சென்று சடையப்பவள்ளலை வணங்கி, "நான் பரராச சிங்கருக்கு அமைச்சன். எங்கள் ஈழநாடு பஞ்சத்தால் வருந்துகின்றது. அப்பஞ்சத்தை ஒழிப்பது உங்கள் கடமை. உங்கள் நன்றியை என்றும் மறவேன்," என்றான்.

"அமைச்சரே, நீங்கள் என்னைப் புண்ணியத்திற்கு ஆளாக்கினீர்கள். அதற்கு என் நன்றியும் வணக்கமும் உரியவை. பசி என்பது பெருநெருப்பு. அந்நெருப்பிற் பட்ட புழுக்கள், உயிர்கள். எத்தனை நாளாக உங்கள் நாடு பசித்தீயால் எரிக்கப்படுகின்றதோ! இப்பொழுதே நீங்கள் உணவுப் பொருள்களைக் கொண்டு செல்லுங்கள்," என்று சடையப்ப வள்ளல் கூறிப் பல பாய்மரக் கப்பல்களில் உணவுப் பொருள்களை அனுப்பினார்.

கப்பல்கள் கருங்கடலின் பெருவயிற்றைக் கிழித்தோடின. அவை பெருஞ்சுறு மீன்கள் போலத் தோன்றின. இலங்கையின் பசியைப் போக்கக் கடலுக்கு அருள் தோன்றித் தன் அலைக்கைகளால் வேகமாகக் கப்பல்களைத் தள்ளிற்று. அதனைக் கண்ட காற்றுக்கும் அருள் பிறந்து அதுவும் கடலுடன் சேர்ந்து கப்பல்களை மோதிச் செலுத்திற்று.

ஒரு நாள் பரராச சிங்கன் அவைக்களம் பொலிவற்றிருந்தது. அதற்குக்காரணம் பரராச சிங்கனே. அன்று அவன் சோகமே உருவமானான். அதனால், அவனுக்குப் பேச்சு வரவில்லை. ஆனால், அவனது எண்ணம் மட்டும் ஓயவில்லை. 'அமைச்சன் சடையப்ப வள்ளலிடம் சென்று எத்தனையோ நாளாயின. அவன் இன்னும் வரவில்லை,' என்று அவன் எண்ணிப் பார்த்தான். அது அவன், நினைவிற்கு வரவில்லை. "அமைச்சன் என்று வருவானோ, என்று குடிகள் பசி நீங்குமோ!" என்று அவன் எண்ணிக் கொண்டிருந்தான். அச்சமயத்தில் ஒருவன் விரைந்தோடி வந்து அரசனைக் கண்டு "அரசரே, உணவுக் கப்பல்!

உணவுக் கப்பல்!" என்று கத்தினன். கத்தினவன் அரசவையில் குறுக்கும் நெடுக்கும் ஓடினன்.

"இந்த முட்டாளுக்கு அரசவையில் நடந்து கொள்ளும் முறை தெரியவில்லையே!" என்ருன் அமைச்ச ெருருவன்.

"மகிழ்ச்சி மிகுதியால் அவன் உணர்ச்சியழிந்தான்," என்ருன் மற்ருேர் அமைச்சன்.

பரராச சிங்கனும் மகிழ்ச்சியால் விழுங்கப்பட்டான். அவன் அரியணை விட்டிறங்கித் துறைமுகத்தை நோக்கி ஓடினன். அவனது மேலாடை விழுந்ததும் அவனுக்குத் தெரியாது. உணவுக் கப்பல் துறைமுகத்தை அடைந்த செய்தி கரையை உடைத்த வெள்ளம்போல நகரெங்கும் பரவிற்று. மக்கள் வெள்ளம் கடலை நோக்கிச் சென்றது. உணவு உயிர் வளர்க்கும் மருந்தன்ருே?

பரராச சிங்கன் வரிசையாக நிற்கும் உணவுப் பொருட்கப்பல்களைக் கண்டான்; மகிழ்ந்தான்; சடையப்ப வள்ளலிருக்கும் திசை நோக்கித் தொழுதான். குடிகளும் அவ்வாருனர்கள். "உணவுப் பொருள்களை அவரவர்களுக்கு வேண்டும் அளவு பங்கிட்டுக் கொடுங்கள்," என்று அவன் கட்டளை இட்டான்; இட்டு, அவனே கண்காணித்து வந்தான். அமைச்சர் அவ்வாறே செய்தனர். அவ்வுணவுப் பொருள்கள் சில தினங்கள் வரை மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தின. பின் நாட்டில் நல்ல மழை பெய்தது. நல்லோர் மனம் போல நாடு செழித்தது. தாயின் மனம் போலப் பரராச சிங்கன் உள்ளம் மகிழ்ந்தது.

"பஞ்சப் பேயை நாட்டிலிருந்து ஓட்டினார் சடையப்ப வள்ளல்; எமனுலகு செல்ல இருந்த உயிர்களைச் செல்லாமல் தடுத்தார். அவர் செய்த உதவிக்கு ஒப்பு இவ்வுலகமும் ஆகாது. அவருக்குக் கைம்மாறு செய்ய வேண்டும். கைம்மாற்றை அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார். செய்யாமற்போவது, என் குற்றம். என் செய்வது!" என்று பரராச சிங்கன் பலவாறு எண்ணினான்; எண்ணிச் சடையப்ப வள்ளலின் கொடையைப் பாராட்டி, ஒரு செய்யுளியற்றி அனுப்பினான். அச் செய்யுளின் பொருள், "உயர்மரங்கள் நெருங்கி இருக்கின்ற புதுச்சேரியில் சங்கரன் பெற்ற சடைப்ப வள்ளல் வாழ்வதனால் இரவு நடுப்பகல் ஆனால் என், நடுப்பகல் இரவானால் என்? சூரியன் எட்டுத்திக்கிலும் மாறிமாறித் தோன்றினால் என்? ஏழு கடல்களும் பொங்கினால் என், வற்றினால் என்? நீதியைப் பாது காக்கும் அரசர்கள் வாழ்ந்தால் என். இறந்தால் என்? வளத்தால் இன்புறுகின்ற சோழநாட்டில் வாழ்கின்றோம் என்னும் காரணத்தால் சிவபெருமான் சிதம்பரத்தில் நடிக்கின்றார். திருமால் திருவரங்கத்தில் தூங்குகின்றார்," என்பது.

இச்செய்யுளை ஓர் அமைச்சன் எடுத்துச் சென்று சடைப்ப வள்ளலிடம் கொடுத்து வணங்கி, "நீங்கள் எங்கள் நாட்டுப் பசிப்பிணியைப் போக்கினீர்கள். அதற்குக் கைம்மாறாக எம் அரசர் பரராச சிங்கர் இச்செய்யுளை அளித்துள்ளார். இதனை அவரே இயற்றினார். அருள் கூர்ந்து இச்செய்யுளை ஏற்றுக்கொள்ளுங்கள்," என்றான்.

சடையப்ப வள்ளல் அதனைப் படித்து, "நான் இச் செய்யுளை அன்போடு ஏற்றுக்கொள்ளுகிறேன். அரசர் என்னை அதிகமாகப் பாராட்டி உள்ளார். அதற்கு நான் தகுதி உடையவன் அல்லேன். என்மேல் அவர் கொண்ட அன்பே இதற்குக் காரணம். நான் என் கடமையைச் செய்தேன்," என்றார்.

## புலவர்க்குப் பரிசு

அந்தகக்கவி வீரராகவர் இலங்கையிலும் தமிழ் பரப்பக் கருதி அங்குச் சென்றார். அங்குப் பல பகுதிகளுக்குச் சென்று பலர்க்குச் செந்தமிழ்த் தேனை அள்ளி அள்ளிக் கொஞ்சிக் கொஞ்சி ஊட்டினார். பலர் செவியே வாயாக உண்டனர். அந்தகக் கவிராயர் பரராசசிங்கனைக் காணச்சென்றார்.

"குருடர்களை அரசர்கள் காணக்கூடாது," என்று அவனுடைய அமைச்சர் கூறினர். ஆயினும், புலவரது விருப்பத்திற்கு மாறாக நடக்க அரசனால் முடியவில்லை. அதனால், மேகத்துள் மறைந்திருக்கும் இளஞ்சூரியன் போல அவன் திரைக்குள்ளிருந்து புலவரை வரவேற்றான்.

புலவர், "ஈழத்து மன்னரே, பரராசசிங்கரே, வெண் கொம்பும் கருங்கண்களுமுள்ள யானைக்கன்றும் வள நாடும் நீர் அளிப்பீர் என்று நான் கடல் கடந்து வந்தேன். நீர் திரையிட்டுக்கொண்டிருக்கின்றீரே!" என்றார்.

"இதனை இவர் எவ்வாறு அறிந்தார்?" என்று, அரசனும் அமைச்சரும் வியப்புற்றனர். உடனே அமைச்சரொருவன் கவிராயரை நோக்கி, "அரசர் இப்போது, எந்தக் கோலத்தோடு இருக்கின்றார்? கூறுமின்," என்றான்.

புலவரது சிந்தனை சிறிது தடைப்பட்டது. "அரசன் இயற்கைக் கோலத்தோடிருப்பின், இவ்வாறு கேட்கக் காரணமில்லை. அவனது இயற்கைக் கோலம் அல்லாதது போர்க்கோலமே," என்று புலவர் எண்ணி, "இலங்கை மன்னனாகிய இராவணன் இப்போது இல்லை. மாரீசனாகிய மாயமானில்லை. ஏழு மராமரங்களும் இல்லை. அபிராமரே, நீர் இப்போது வில்லேந்தி நிற்கக் காரணம் யாது? எனக்குச் சொல்லும்," என்னும் பொருள் பொதிந்த வெண்பாவால் புலவர் விடை கூறினார். (அரசனைத் திருமாலாகச் சொல்வது வழக்கம்.)

மேகத்திரையை நீக்கிக்கொண்டு வரும் இளஞாயிறு போலப் பரராசசிங்கன் திரையை நீக்கிக்கொண்டு வந்து கவிராயரைத் தழுவிக்கொண்டான். புலவரும், "அரசரே, வந்துவிட்டீரா?" என்று வினவினார். "காலை வேளையில் இன்குரற்பறவை பாடினால் செங்கதிர்ச் செல்வன் உதயமாகாமல் இருப்பானா?" என்றான் பரராசசிங்கன். புலவரின் கவிச்சுவையையும் அரசனது சொற்சுவையையும் சுவைத்து அருகிலிருந்தோர் குலுங்கச் சிரித்தனர்.

பரராசசிங்கன், பெருமகிழ்ச்சியுற்று அந்தகக்கவி வீரராகவருக்குப் பொற்கிழி (பொன்னுள்ள பை) அளித்து, அவரைப் போற்றினான். "குங்குமம் தோய் மலைபோன்ற

தோள்களை உடைய பரராசசிங்கர் எனக்குப் பொற்கிழி அளித்தார் அதனால், நாள்தோறும் வளர்கின்ற வறுமை ஒழிந்தது! என் கவிதை எங்கும் சிறப்புற்றது!'' என்னும் கருத்துப் பொதிந்த செய்யுளைப் புலவர் கூறினார். புலவர் அடிக்கடி அரசவைக்குச் சென்று இலக்கிய இலக்கணங்களால் அரசனை மகிழ்வித்தார்.

பரராசசிங்கன் ஒரு நாள் புலவரை நோக்கி, "நீங்கள் கம்பராமாயணச் சொற்பொழிவாற்றி எங்களை மகிழ்வித்துக் கடைத்தேறச் செய்யவேண்டும்,'' என்றான். புலவர் அவ்வாறே கம்பராமாயணப் பாடல்களை மனப்பாடமாகவே சொல்லி, நாள்தோறும் சொற்பொழிவாற்றினார். பலர் கேட்டு மகிழ்ந்தனர். பரராசசிங்கனும் மகிழ்ந்து, "கம்பராமாயணம் குளிர் பூஞ்சோலை. அச்சோலையில் மலர்ந்த மலர் உங்கள் சொற்பொழிவு. மலரில் பாடும் வண்டின் குரல் உங்கள் குரல். தேனுண்ட வண்டுகள் நாங்கள்,'' என்று பாராட்டி இராமாயண அவதானம் செய்யும்படி வேண்டினான். அவ்வாறே அவர் அவதானம் செய்தார்.

"இன்னம் கலைமகள் கையில் புத்தகம் ஏந்தி அழகிய தாமரைப் பள்ளியில் அமர்ந்திருக்கின்றாள். என்ன புண்ணியமோ! களத்தூர் கவி வீரராகவர் காஞ்சிபுரத்தில் தம் நெஞ்சமே ஏடாக முத்தமிழையும் கற்றார்,'' என்னனும் கருத்துப்பொதிந்த செய்யுளால் புலவரைப் பாராட்டி யானைக்கன்றும் வளநாடும் அவர்க்குப் பரிசாக அளித்தான் அரசன்.

# பத்தி வெள்ளம்

பரராசசிங்கனிடத்தில் வீரம் விளங்கிற்று ; தமிழ்ப் புலமை வழிந்தது; நீதி தழைத்தது. புலவர்களிடத்தில் அன்பு படர்ந்தது.சிவபெருமானிடத்தில் பத்தியில் அழுந்தி அவனது உள்ளம் சுவடுபட்டது. அவன் ஆண்டு தோறும் திருவாரூர்க்கு வந்து தியாகேசப் பெருமானைக் கண்டு உடல் குழைய, என்பெலாம் நெக்குருக; விழி களில் நீர் ஊற்றெனப் பெருக, ஊசி காந்தத்தில் சேர்வது போல ஈசரிடத்திற்சேர்ந்து, தன்னை மறந்திருப்பது வழக்கம். கற்றதன் பயனும் உடலைப் பெற்றதன் பயனும் இறைவர் அடி போற்றுதல்.

திருவாரூரில் தான் தங்குவதற்கென்று பரராசசிங் கன் சிறந்த மாளிகை ஒன்று கட்டினான். அதனைச் சுற்றி லும் அழகான பூஞ்சோலை-பூஞ்சோலைக்கு இடையில் குளிர்நீர்ப் பொய்கை—மாளிகையிலிருந்து கோவிலுக்குச் செல்ல ஒரு சுரங்கம்—அதன் வழியே அரசமகளிர் கோவிலுக்குச் சென்று இறைவரை வழிபட்டனர்.

"என்றும் வாடாமல் மணம் குன்றுமல் இருக்கும் பாமாலை ஒன்று இறைவர்க்குச் சூட்டவேண்டும்," என்று பரராசசிங்கன் பெருவிருப்பம் கொண்டான். அவனுக் குப் பாமாலை புனையத் தெரியும். ஆயினும், "பிறர் புனையக் கண்டு களிப்பதுவே பேரின்பம்," என்று அவன் கருதி ஞன். ஒருவன் செய்யும் தொழிலின் திறம் மற்றொருவ னுக்குத்தான் நன்கு தெரியும்.

"கவி வீரராகவரே அதற்கு ஏற்றவர்," என்று அவன் கருதினான். அவன் அக்கவிராயரை அழைத்து, "ஊனக்கண் இன்றியே ஞானக்கண் பெற்றீர் என்பது நன்கு தெரிகின்றது. திருவாரூர்த் தியாகேசப் பெருமானுக்கு நீவிர் பாமாலை சூட்டுவீராக," என்று வேண்டினான். அவ்வாறே அந்தகக்கவிராயர் திருவாரூர் உலா என்னும் சிறந்த நூலொன்றியற்றினார்.

அதனைப் பரராசசிங்கன் படிக்கத் தொடங்கினான். அவனது உடல் பூரித்தது; உள்ளம் மலர்ந்தது; கண்களில் நீர் ஒழுகிற்று; முகத்தில் புன்னகை தோன்றியது. அவன் அந்நூலைப் பாராட்டி, "உலகம் அழகு பெறும் திருவாரூர் உலாவைப் புலவர்க்கெல்லாம் செவியே சுவைபெறுமாறு செய்தார். சிவஞானம் கைவரப் பெற்ற அனுபவஞானி யார் எனும் நம் கவி வீரராகவர். அவர் பாடிய நற்கவியே கவி. அவரல்லாதபேர் பாடிய கவி கற்கவி. (கற்கவி—வாயில்களின்மேல் கவிந்த வடிவமாய்க் கல்லால் செய்யப்படுவது)" என்னும் கருத்துப் பொதிந்த செய்யுளைக் கூறி மகிழ்ந்தான். அது மட்டுமன்று; நன்னீர்போல் புலவர்க்குப் பசும்பொன் பரிசளித்தான். அவனளித்த பரிசினால் அவனது புகழ் வளர்ந்தது; தமிழ்ப் பூஞ்சோலையில் ஒரு தளிர் தோன்றியது.

# 8. சந்திரவாணன்

[தமிழ் நாவலர் சரிதையையும் கர்ண பரம்பரைச் செய்தி களையும் கொண்டு இவ்வரலாறு எழுதப்பட்டது.]

## செந்தமிழ்த் தொண்டு

வாணர் குலச் சிற்றரசர்களுள் ஒருவன் சந்திர வாணன். அவன் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டில் இருந்தவன், அனந்தபுரத்தின் அரசன். அனந்தபுரம் விழுப் புரத்திற்கு மேற்கிலுள்ளது; முற்காலத்தில் சந்திரவாண னுக்குத் தலைநகர்; இக்காலத்தில் ஒரு சிறு கிராமம். சந் திரவாணன் அரச நீதி தவருமல் ஆட்சி புரிந்தான். புல வர்களை அவன் பொன்னெனப் போற்றினன்; தமிழைத் தன் கண்ணெனக் காத்தான். செந்தமிழ்ச் சுவையை அவன் எப்போதும் துய்த்துக்கொண்டே இருந்தான்.

"செந்தமிழ் அன்னைக்குப் பல மன்னர்கள் மாலை களையும் கோவைகளையும் சூட்டினர்கள். நானும் அத்தெய் வத்திற்கு அணி (நகை) இட்டுக் கண்டு களிக்க வேண் டும். அதற்கேற்ற புலவர் யார்? எந்த வகையாகத் தமிழ்த்தாயை அழகுபடுத்துவது?" என்று சந்திரவாணன் எண்ணினன். அப்போதிருந்த புலவர் மணிகளுள் அந்த கக்கவி வீரராகவ முதலியார் அவனது உள்ளத்தில் தோன்றினர். அதனல், அந்த உள்ளம் குளிர்ந்தது; இனித்தது. உடனே அவன் ஏவலரை நோக்கி, "நீங்கள் முத்துப் பல்லக்குக் கொண்டுபோய் அந்த கக்கவி வீரராகவ முதலியாரை அழைத்துக்கொண்டு

வாருங்கள். அவர் பூதூரில் தமிழ்த்தொண்டு செய்கின்ருர்; தமிழணங்கை அலங்கரிக்கின்ருர்; தமிழ்த்தேனைப் பலருடைய நாக்களில் சொரிகின்ருர். அவரை விரைவில் அழைத்து வாருங்கள்," என்ருன்.

ஏவலர், முத்துப்பல்லக்கோடும் அரச விருதுகளோடும் அனந்தபுரத்திலிருந்து புறப்பட்டுப் பல நாள் நடந்து பூதூரை அடைந்தனர். அவ்வூரார் மகிழ்ந்தனர். ஏவலர் புலவரைக்கண்டு வணங்கி நின்றனர். புலவர் அவர்களை உட்காரச் சொன்னுர். அவர்கள் உட்கார்ந்து, "புவிராசர் போற்றும் கவிராச சிங்கமே, நாங்கள் சந்திரவாணரின் ஏவலர். அவர் அனந்தபுரத்தின் சிற்றரசர்; புலவரைப் போற்றும் இயல்பினர். அவர் உங்களை அழைத்துக்கொண்டு வருமாறு எங்களை அனுப்பியுள்ளார்," என்று கூறினர்.

"வழி நடந்த களைப்பு நீங்க, நீங்கள் சில நாள் இங்கிருங்கள். பின் எல்லோரும் போகலாம்," என்ருர் அந்தகக்கவி வீரராகவ முதலியார். அவ்வாறே அவர்கள் அங்குச் சிலநாளிருந்தார்கள். புலவர், அவர்களுக்கு விருந்தளித்து, இன்மொழி கூறினுர். பின் ஒரு நாள் புலவர் புறப்பட்டார்.

ஏவலர் அவரைக் கைகொடுத்துப் பல்லக்கில் ஏற்றினர். பல்லக்கினுள் விரித்திருந்த வெண்பட்டில் அமர்ந்தார் புலவர். முன் அரச விருதுகள் சென்றன. பின் பல்லக்குச் சென்றது. முழுநிலவைச் சூழ்ந்து விண்மீன்கள் ஒளி வீசுவதுபோலப் பல்லக்கின் முத்துக்கள் கவியரசரைச் சூழ்ந்து ஒளி வீசின. இளந்தென்றல் அவரைத் தடவிக் கொடுத்தது. மரங்கள் மலர்களைச் சொரிந்தன.

அம்முத்துப் பல்லக்குப் பூப்பல்லக்காகக் காணப்பட்டது. அம்மலர்களின் தேனை உண்டு வண்டுகள் யாழ் வாசித்தன. அந்த யாழுக்கேற்பப் பல்லக்குச் சுமந்து சென்ற போகிகள் பாடினார்கள். அவ்வாறு புலவர் சென்றுகொண்டிருந்தார்.

போகிகளுள் ஒருவன், "சூரியன்போல் கண்கள் உள்ள புலவர் இவ்வுலகில் பலர் இருக்கின்றனர். மலரில்லா மரம் போல இரு கண்களும் இல்லா இப் புலவனை நம் அரசர் அழைத்தார். இவன் என்ன பாடுவான்? நம் அரசர் அறிவுடையவர்தான். எவனோ இப்புலவனைப்பற்றிப் பிரமாதமாகச் சொல்லிவிட்டான். அவன் பேச்சை நம்பி நம் அரசர் இவனை அழைத்து வரச் சொன்னார். இல்லை! இல்லை! அரசர்தான், 'அந்தகக்கவி' என்று சொன்னாரே! இவன் குருடன் என்று அவர் தெரிந்திருக்கின்றார். 'விளக்கேற்றிக்கொண்டு கிணற்றில் விழப்போகின்றார் நம் அரசர்,'' என்று பலவாறு எண்ணிக்கொண்டே சென்றான்.

பல்லக்கு ஒரு குளிர்சோலையை அடைந்தது. போகிகள் பல்லக்கை நிறுத்திப் புலவரைக் கைபிடித்து இறக்கினார்கள். புலவரும் போகிகளும் கட்டுச்சோறுண்டார்கள்; ஆலமர நிழலில் களைப்பாறிக்கொண்டிருந்தார்கள். பறவைகள் பாடிக்கொண்டிருந்தன. அப்போது மேற்கூறிய போகி ஒருவாறு தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டு புலவரைப் பார்த்து, "புலவரே, நான் உங்களைக் கண்டது முதல் ஒரு பெரிய சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. அதனைத் தீர்த்துக்கொள்ளலாமா?'' என்றான்.

புலவர்: அஞ்சாமல் சொல்.

போகி : நீங்கள் பிறக்கும் பொழுதே குருடராய்ப் பிறந் தீர்களாம். எவ்வாறு பாடக் கற்றுக்கொண்டீர்கள்?

முதன்முதல் எழுத்துக்களை என் முதுகில் பிறரை எழுதச் சொன்னேன். அவ்வாறே நான் மணலில் எழுதிப் பழகிப் பின் மனத்தில் எழுதிக்கொண் டேன்; பிறரைப் படிக்கச் சொல்லிக்கேட்டு அதனை மனப்பாடம் செய்து மூளையில் எழுதிவிட்டேன்.

போ : ஆச்சரியம்! ஆச்சரியம்! நீங்கள் பாடுகின்ற பாடலை எப்படி ஏட்டில் எழுதுவீர்கள்?

நான் எண்ணிப் பாடுவேன். மற்றொருவர் ஏட்டில் எழுதுவார்.

போ : 'காதிருந்தும் செவிடன்,' என்பது போலக் கண் ணிருந்தும் நான்தான் குருடன். உங்கள் அறிவிற்கு வணக்கம்! உங்கள் அன்பான விடைக்கும் வணக்கம்!

அவர்களுடைய உரையாடலைக் கேட்டு மற்றவர் மகிழ்ந்தனர். பல நாள் கடந்து அவர்கள் அனந்தபுரத்தை அடைந்தார்கள். புலவர் வருகையை முன்னமே அறிந்து சந்திரவாணன் அமைச்சர்களை அனுப்பிப் புலவரை வர வேற்கக் கூறினான். அமைச்சர்கள் சென்று புலவரை வணங்கி, "உங்களை வரவேற்க அரசர் கட்டளையால் வந்துள்ளோம்," என்றார்கள். போகிகள், 'வந்திருப்பவர் கள் அமைச்சர்கள்,' என்றார்கள். புலவர் அவர்களை வாழ்த்தினார்.

பல்லக்கு அரண்மனையின் புறவாயிலை அடைந்தது. புலவர் வருகைக்காக அங்குக் காத்துக்கொண்டிருந்தான் சந்திரவாணன். அவன் விரைந்து சென்று பல்லக்கிலிருந்த புலவரை வணங்கி, அவரை மெல்ல இறக்கி, இன்மொழி கூறி, உடல் பூரித்து, அவரது கையைப் பிடித்து அழைத்துக்கொண்டுபோய்த் தன் அரியணையின் பக்கத்தில் அமரச் செய்தான். பின் அவன் புலவர்க்கு நல்விருந்திட்டான்; இன்மொழிகளால் புலவரை உபசரித்தான்.

புலவர் மகிழ்ந்து, "அரசரே, உமது தேன் போன்ற இன்மொழிகளைக் கேட்க எனக்குக் காதுண்டு. ஆனால், உமது பேரழகைக்காண எனக்குக் கண்ணில்லை. என் செய்வேன்! என் தீவினையின் திருவிளையாடல் அது," என்று வருந்தினார்.

"இந்த மன்னர் எதற்காக வரவழைத்தார்? நானே கேட்பது நாகரிகமன்று," என்று புலவர் சிந்தனையில் ஆழ்ந்தார். அவரது முகத்தால் அதனைச் சந்திரவாணன் அறிந்து, "புலவரே, நெடுநாளாக என் உள்ளத்தில் ஒன்றுண்டு. அதனை நிறைவேற்றுவார் உங்களை அன்றி வேறு யாருமில்லை. அது உங்களுக்கு விருப்பமானது; உங்களால் எளிதாகச் செய்யக்கூடியது; என்னால் செய்ய முடியாதது," என்றான் சந்திரவாணன்.

"அரசராகிய உங்களால் முடியாதது புலவனாகிய என்னால் முடியுமோ? முடிந்தால் அது இறைவர் அருள்," என்றார் கவிராயர்.

"செந்தமிழ்ப் பாவைக்கு ஒரு கோவை (நூல் வகையில் ஒன்று,) செய்து தாரும். அதுவே எனது வேண்டுகோள். நான் ஆளும் மண்ணுலக இன்பம் அழியும். தாங்கள் ஆளும் தமிழுலக இன்பம் அழியாது. அழியாத தமிழின்பத்தை—கலை இன்பத்தை—ஒழுக்க இன்பத்தை மக்களுக்குக் கொடுக்க விரும்புகின்றேன். நீர் என் விருப்பத்தை நிறைவேற்றுவீராக!" என்றான் மன்னன்.

"எனக்கு விருப்பமான பணியே செய்யச் சொல்கின்றீர். 'கரும்பு தின்னக் கூலி வேண்டுமோ?' உங்கள் தமிழன்பே இமயம்; கலை ஆர்வமே கடல்; எளிமையே இளங்கொடி. பசுவின் பால் உணவாகி மருந்தும் ஆவதுபோல, நீங்கள் என்னை இயற்றச் செய்யும் நூல் நம் இருவர்க்கும் புகழையும் படிப்போர்க்கு இன்பத்தையும் தரும். இத்தகைய நற்பணி இறைவர் அருளால் முடியும்," என்றார் புலவர்.

சந்திரவாணன் கூறியது போலப் புலவர் ஒரு நூலியற்றினார். அது இயற்றுதற்கு மூன்று திங்களாயின. அதற்கு "வாணன் கோவை" என்று பெயரிட்டார் புலவர். தாம் நூலியற்றி முயத்ததைப் புலவர் சந்திர வாணனுக்குக் கூறினார்.

"அனந்தபுரத்தரசர் வாணருக்குக் கவிவீரராவன அனுப்பும் ஓலை இது. அவர் தம் விருப்பினால் என்னை வலிய அழைத்தார்; கோவை இயற்றக் கூறினார். அதனை இயற்ற மூன்று திங்களாயின. ஆகியும், அவர் தம்முடைய காதுகளால் ஏற்கவில்லை. இவ்வுலகம்

என்ன எண்ணுமோ? அரசர்க்கரசர் திறை கொள்ளும் என் கவிதை இங்கு வந்து குறைபாகுமோ? உலகினர் உம்மை என் சொல்வர்? என்னை என் சொல்வர்? தமிழ்க்குத்தான் மானமல்லவோ? உம் புகழ்க்கும் இது நீதியோ? இப்பொழுதே நீர் விரைந்து வரவேண்டும்'' என்னும் பொருள் பொதிந்த சீட்டுக்கவியை அரசனுக்கு அப்பினர்.

சந்திரவாணன் பின்னரும் இரண்டொரு நாள் கழித்தான். அவனது ஏவலாள் ஒரு நாள் புலவரை வணங்கி, "உங்களை அரசர் அழைத்துக்கொண்டு வரச் சொன்னார்" என்றான். புலவர் அரசனைக் கண்டார். அவன் அவர்க்கு இருக்கை கொடுத்து, "கவிவீர ராகவரே, உங்கள் மனம் வருந்தியதற்கு நான் மிகவும் வருந்துகின்றேன். அரங்கேற்றம் முடித்தால் நீங்கள் ஊர்க்குச் சென்றுவிடுவீர்கள். செல்லாமல் இருக்கவே அரங்கேற்றத்தை நிறுத்தி வைத்துள்ளேன். நான் உங்கள் கருத்தை அறிந்தேன். நாளையே நீங்கள் அரங்கேற்றுங்கள். ஏற்ற ஏற்பாடு செய்துள்ளேன்,'' என்றான்.

அடுத்த நாள் அரங்கேற்றும் தொடங்கிற்று. அரசனும் அருந்தமிழ்ப் புலவர்களும் ஆர்வமுள்ள பெரியோர்களும் அவையில் குழுமி இருந்தனர். அந்தகக்கவி சந்திரவாணன் கோவையை அரங்கேற்றினார். அவர் ஒவ்வொரு பாடலையும் இசையுடன் பாடி, பதவுரை கூறி, விரிவுரை சொல்லி, மேற்கோள் காட்டி, சொல் நயம் கூறினார். அது சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததுபோலிருந்தது. அறிந்து சிலரும் அறியாமல் சிலரும் கவி வீரராகவரை வினவினர். வினாக்களுக்கேற்ற

விடைகள் கூறினர் புலவர். அவையோர் இன்பப் பொய்கையில் மூழ்கினர்.

"மாலே நிகராகுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட **முப்பழச் சேற்றின்** அமுதவயல்
மேலே முளைத்த **கரும்போ**........ உடலெங்குமோ!"

என்ற இச்செய்யுளைப் படித்தான் கையேடு படித்தவன். அரங்கேற்றத்திற்கு வந்திருந்தவர்களுள் ஒருத்தி தாசி அம்மைச்சி என்பவள். அவள் முத்தமிழிலும் வல்லவள். அவள் "புலவர்க்குக் கண்கள் தாம் கெட்டன. அறிவும் கெட்டதோ? சேற்றிலா முளைக்கும் செங்கரும்பு?" என்று வினவினள்.

புலவர் அவளது புலமையை எண்ணி மகிழ்ந்து கையேடு படித்த மாணவனைப் பார்த்து, "கொம்பை வெட்டிக் காலை நடு," என்றார். ே– கொம்பு. ா – கால், சே என்னும் எழுத்தின் முன் உள்ள கொம்பை நீக்கிச் ச என்னும் எழுத்தின் முன் கால் இட்டுச் 'சாற்றின்' என்று படித்தான் கையேடு படித்தவன். தாசி அம்மைச்சி நாணித் தலைகுனிந்தாள்.

புலவரது சொல் நயத்தையும் கையேடு படித்தவனது நுண்ணறிவையும் அவையோர் போற்றிப் புகழ்ந்தனர். "பண்பட்ட உள்ளக் கழனியில் புகுத்தறிவு மழை நீர் பாய தழ்க்கலை எருவிலே வளர்ந்ததோ இப்புலவரது புலமைப் பயிர்! இந்நூல் கற்பனைப் பொய்கையில் மலர்ந்த செந்தாமரை. இவரது சொற்பொழிவு தேன் பாய வளர்ந்த செங்கரும்பு," என்று சந்திரவாணன் பாராட்டினன்.

புலவர்க்குப் பரிசு பொன் தட்டுக்களில் வரிசை வரிசையாய் வந்தது. அப்பரிசிலைத் தானே புலவர் கையில் கொடுக்கச் சந்திரவாணன் எண்ணி, அவனே அப்பரிசிலைப் புலவர் கையில் கொடுத்து, "நான் கொடுக்கும் இப்பரிசு நல்வழியிற் செலவாகிச் சில நாளைக்குள் மறைந்துவிடும். நீர் தமிழ்நாடு இருக்குமளவும்—தமிழர் உள்ள அளவும்—தமிழ் மொழி உள்ள அளவும் என் புகழ் விளங்கச் செய்துவிட்டீர். இன்னும் பல ஏடுகளில் என் பெயர் எழுதப்படும். அதற்கும் நீரே காரணம்,'' என்று கூறினன் சந்திரவாணன். அந்த கக்கவிராயர் அவனுக்கு நன்றி கூறினர். அவையோர் இருவரையும் பாராட்டினர்.

# 9. அதிவீரராம பாண்டியர்

[கல்வெட்டுக்கள், தமிழ் நாவலர் சரிதை, தனிப் பாடல்கள், கலைக் களஞ்சியம், பெருந்தொகை என்னும் இவற்றின் துணையால் இவ்வரலாறு எழுதப்பட்டது.]

## முடி சூட்டு விழா

பாவேந்தர்களைப் பாதுகாத்து, நல்லறங்களை வளர்த்து வீரத்தைப் போற்றி மலை விளக்குப்போல விளங்கினர் முடியுடை மூவேந்தர். அவர்களுள் ஒருவர் பாண்டியர். கி. பி. பதினாறும் நூற்றாண்டு வரை பாண்டியர் ஆட்சி விளக்குக் கொழுந்துவிட்டு எரிந்தது. பின் அயலவரின் படையெடுப்புப் புயலால் அவ்விளக்கு அணைந்தது. டில்லி மன்னன் படைத்தலைவன் மாலிக்காபரின் படை எடுப்பாலும், விசயநகரத்து மன்னன் படைத் தலைவன் கம்பணவுடையான் முற்றுகையாலும் பாண்டியர் ஆட்சி சிதைந்தது. அதிவீரராம பாண்டியரின் ஆட்சியோடே பாண்டியர் ஆட்சி முடிந்துவிட்டதென்றே கூறலாம். அந்தோ! அந்தோ! தமிழ் வளர்த்த அக்குலம் இன்று இருக்கும் இடங்கூடத் தெரியவில்லையே!

செந்தமிழ்ப்பயிரைப் பொருள்நீர் பாய்ச்சி, வளர்த்தனர் பாண்டியர்; நல்லறச்சோலையை நடுவு நிலைமை வேலி இட்டுக் காத்தனர். தமிழ் வளர்த்த பாண்டியர் எங்கே? அறத்தைக் காத்த அரசர் எங்கே? அக்குலம்

மறைந்தது காலத்தின் கோலமோ? விதியின் திருவிளை யாட்டோ?

"திருநெல்வேலிப்பெருமாள் வீர வெண்பா மாலை யான் தன்மப்பெருமாள் குலசேகரதேவர், அதிவீரராம பாண்டியர்க்குத் தந்தை," என்று குற்றாலக் கல்வெட்டுக் கூறுகின்றது. ஸ்ரீ வல்லபன், சீவலன், இராமன், பிள்ளைப் பாண்டியன், குலசேகரன் எனப் பல பெயர்கள் அதிவீரராமபாண்டியர்க்கு உண்டு. அவர் இளமை யில் தமிழ், வடமொழி, அரசியற்கலை முதலியவற்றை நன்கு கற்றார். அவரது புலமையையும் ஒழுக்கத்தை யும் கண்டு உலகம் போற்றியது.

கி. பி. 1564ல் அதிவீரராம பாண்டியர்க்கு முடி சூட்டு விழா நடந்தது. அன்று புண்ணிய தீர்த்தங்களால் அவர்க்குத் திருமஞ்சனமாட்டினர்; சிறையிலிருந்தோர் விடுதலை பெற்றனர்; கலையை வளர்க்கும் புலவர்களும் பாணர்களும் பரிசு பெற்றனர்; ஏழைகள் தானம் பெற்ற னர்; முனிவர்கள் வாழ்த்தினர். பாண்டி நாட்டு மக்கள் இன்பத்தில் ஆழ்ந்தனர்.

அதிவீரராம பாண்டியர் கொற்கையைத் தலை நகராகக் கொண்டு, கி. பி. **1564** முதல் **1603** வரை பாண்டி நாட்டை ஆட்சி புரிந்தார். 'அவர் விசய நகரத்து மன்னர்கீழ் ஆட்சி புரிந்தார்,' என்றும் கூறுகின் றனர். தம் முன்னோர் போல அவர் போர் செய்ததாகத் தெரியவில்லை. மண்ணுலகை ஆண்டதோடு தமிழ் உலகையும் ஆண்ட சிறப்பு அவர்க்கு உண்டு. சீவல மாறன் கதை அவரைச் சிறப்பிக்கின்றது.

# போலிப் புலவர்க்கு குட்டு

அதிவீரராம பாண்டியர் தண்ணீர்போலப் பொருளை அள்ளி அள்ளிப் புலவர்களுக்குக் கொடுத்தார்; பொருள் நீர் பாய்ச்சிப் புலமை எருவிட்டுத் தமிழ்ச் சோலையை வளர்த்தார். அது நாடெங்கும் இளந்தென்றல் போலப் பரவிற்று. போலிப் புலவர்களும் அதிவீரராமரிடம் பரிசு பெறச் சென்றனர். அரசர் சில குறிப்புக்களைச் சொல்லி அவர்களைச் செய்யுளியற்றச் சொல்வார். அவர்களியற்றிய செய்யுள் சாணை பிடித்த வைரமாக இருக்குமாயின், அரசர் அவர்களுக்குப் பரிசு கொடுப்பார்; அழுக்கடைந்த மணியாக இருக்குமாயின், அவர்களுடைய தலைகளில் நறுக்கென்று குட்டுவார்.

குட்டுப்பட்டோரில் பலர் வருந்திப் படித்துப் புலமை பெற்று அவரிடம் சென்று பரிசில் பெற்றனர். செங்கோல் வேந்தர்—செந்தமிழ்ப்புலவர்—அதிவீரராமரிடம் குட்டுப் படுவதே தங்களுக்குப் பெருமை என்று சிலர் அவரிடம் சென்று குட்டுப்பட்டு உடல் பூரித்தனர். "குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்படு," என்னும் பழமொழி அன்று முதல் எழுந்தது போலும்!

அதிவீரராமரின் தமிழ்ப்பசிக்கு நல்விருந்தானோர்கள் சில உண்மைப் புலவர்கள். பசித்தவனுக்கு உப்பு நீர் கிடைத்ததுபோலச் சில சமயங்களில் போலிப் புலவர்கள் அவர்க்குக் கிடைத்தார்கள். அவர் அவர்களை வெறுத்தார். களங்கமற்ற தமிழ் வானிலே பல சூரியர்களை ஒளி விடச் செய்ய வேண்டும் என்பது அவரது பேரவா. அதனாலேயே அவர் போலிப் புலவர்களின் தலைகளில்

குட்டினூர். குழந்தைகளைத் துன்புறுத்தி மருந்து கொடுப்பது தாயின் தலை அன்பு.

பிற்காலத்தில் போலிப் புலவர் கூட்டம் மிகுந்தது. எங்கும் அவர்களது ஆரவாரம்மிகுந்தது. அதனால், "குட்டு தற்கோ பிள்ளைப் பாண்டியனுரில்லை," என்று திருத்தோணியப்பர் கூறினூர்.

## தமிழணங்கிற்கு அணிகலன்கள்

"தமிழை வளர்க்கவும் தமிழ்த் தெய்வத்தை அலங்கரிக்கவும் தமிழ்ப் புலவரைப் போற்றவும் வேண்டும். தமிழை வணங்கிய அரசர்களும் செல்வர்களும் சென்று விட்டனர். அச்சான்றோர் போன்றோர் இக்காலத்தில் இல்லை என்றே சொல்லலாம். தமிழை ஏனென்று கேட்போர் யாரிருக்கின்றனர்? தமிழன்னைக்குப் பல மாலைகள் கட்டுவேன்; அணிகலன்கள் செய்வேன்; அவளது அங்கத்துக்கு அங்கம் அவற்றைப் பூட்டுவேன்; கண் குளிரக் காண்பேன்; களிப்பேன்; உடல் பூரிப்பேன்," என்று அதிவீரர் எண்ணினூர்.

எண்ணி, அவர் இலிங்க புராணத்தை இயற்றி, வரதுங்கராமபாண்டியர்க்குக் காட்டினூர். வரதுங்கராம பாண்டியர், அதிவீரராம பாண்டியர்க்குச் சிற்றப்பன் மகனூர். அவர் இலிங்க புராணத்தைக் கண்ணுற்று இன்புற்றூர். அது எளிய நடை (வெள்ளை)யாய் இருந்தது. அதனால் அவர், "இது முத்துப்போல இருக்கிறது" என்றூர்.

அந்த உண்மைச் சொல் அதிவீரராம பாண்டியரை மேலும் ஊக்கிற்று. அவர் காசி காண்டம் இயற்றி வரதுங்க

ராம பாண்டியர்க்குக் காட்டினார். அது கடின நடையில் அமைந்து பொருள் செறிந்து இனிமை மிகுந்திருந்தது. வரதுங்கராமர் அதனைக் கண்டு, "இது கரும்புபோல இருக்கிறது" என்றார். கரும்பை வலிந்து கடித்து நன்றாக மென்றால்தானே சுவைக்கும்?

அதிவீரராமர் கூர்மபுராணம் இயற்றி, வரதுங்க ராமரிடம் காட்டினார். அது எளிய நடையுமின்றிக் கடின நடையுமின்றிச் செம்பாகமாக அமைந்திருந்தது. அதனைக் கண்டு, 'இது பால்போலிருக்கிறது' என்றார் வரதுங்க ராம பாண்டியர். வாயில் பட்டவுடனே பால் இனிக்கும்.

அதிவீரராம பாண்டியர் இளந்தமிழ் மகளை மேலும் அலங்கரிக்க எண்ணி, நைடதம் என்னும் நூலியற்றத் தொடங்கி, மன்மதோபாலனம்பனப் படலம்வரை இனிது பாடினார். அந்நூலின் கற்பனைத் தளிரும் வருணனை மலரும் பொருட்கனியும் அதிவீரராம பாண்டியர்க்குப் பெருமகிழ்ச்சியை உண்டாக்கின. அந்நூல் முற்றுப்பெறுவதற்குள் அதனை வரதுங்கராம பாண்டியர்க்கு அதிவீரராம பாண்டியர் காட்டினார். வரதுங்கர் அதனைக் கண்ணுற்று, "இந்நூல் பாற்கடலில் எடுக்காத அமுதம்! பசுவிலிருந்து கறக்காத பால்! இதனை இயற்றிய உனது புலமையே புலமை! இருப்பினும் உன் புலமையை இறைவரிடத்துச் செலுத்தினால் தேனுக்குச் சுவை ஊட்டியதுபோல இருக்கும்," என்று இன்பமும் துன்பமும் தோன்றக் கூறினார்.

அதனைக் கேட்டதும் அதிவீரராம பாண்டியர்க்கு நைடதத்தின்மேல் சென்ற உற்சாகம் குன்றியது.

'ஒருவாறு நைடதத்தை முடித்து விடவேண்டும்,' என்று அவர் எண்ணி, விருப்பின்றி அதனைப்பாடினர். அவரது புலமை ஊற்றுத் தடைப்பட்டது; வருணனைச் சோலையும் வரண்டது. போகப் போகக் கற்பனையும் வுருணனையும் சொல்லழகும் பொருட்செறிவும் நைடதத்தில் குன்றின. கரும்பை அடியிலிருந்து தின்றுகொண்டு போவதுபோல் அமைந்தது அந்நூல். பழத்தின் மேல்பாகம் சுவையற் றிருப்பினும், அதனை விரும்பாதவர் யார்? நைடதம் இறுதி யில் சிறிதளவு சுவையற்றிருப்பினும் முதலில் சுவை மிகுத் திருக்கின்றது. அதன் பெருமை நோக்கி, 'நைடதம் புலவர்க்கு ஔடதம்,' என்னும் பழமொழி பிறந்தது.

அதிவீரராம பாண்டியர்க்கு, "இறைவர் புகழ்பாட வேண்டும்," என்ற எண்ணம் பிறந்தது. காசிகாண்டம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், வாயுசங்கிதை என்னும் சிறந்த பக்தி நூல்களையும், வெற்றிவேற்கை என்னும் நீதி நூலையும் அவர் இயற்றினர். அவர் தமிழ்த்தெய்வத்தின் திருவடிகளில் இட்ட மலர் (பாடல்)கள் ஏறக்குறைய எண்ணுயிரம் இருக்கலாம். இத்தனை பாடல்களை இயற்றிய அரசர்கள் வேறு ஒருவருமில்லை என்றே சொல்லலாம்.

## வாழ்ந்த புலவர்கள்

அதிவீரராமர் பல புலவர்களை ஆதரித்தார். அவர் களுள் ஏட்டில் இடம் பெறுத புலவர் பலர்; ஏட்டில் இடம் பெற்ற புலவர் பலர். சேறை ஆசுகவிராச சிங்கம் என்னும் பெரும்புலவர் அதிவீரராம பாண்டிய

ரைக் காணச் சென்றார். வாயிற்காவலர் அவரை அரண்மனைக்குள் செல்லாதபடி தடுத்துவிட்டனர். உடனே புலவர் ஒரு சீட்டுக்கவி தீட்டி அரசர்க்கு அனுப்பினார். அரசராகிய அதிவீரர் அச்செய்யுளைக் கண்டு மகிழ்ந்து, "ஆசுகவிராசர்க்கு இன்மொழி கூறி அவரை அழைத்து வாருங்கள். என் வாயிற்கதவு புலவர்களுக்கு மூடாத கதவு. நான் வாழ்வது அவர்களுக்காகவே. புலவர்கள் யாராயினும் எந்நேரமாயினும் என்னைக் காண விரும்பினால் அவர்களை வணங்கி அன்புடன் அழைத்துக் கொண்டு வாருங்கள்," என்றார்.

வாயிற்காவலர் சென்று கவிராசசிங்கத்தை வணங்கி அழைத்துச்சென்று பாண்டியரைக்காட்டினர். பாண்டியர் மகிழ்ந்து, "புலவரே, நீங்கா நிழல்போலத் திரிந்துழன்ற உங்கள் வறுமை இன்றோடே ஒழிந்தது. உங்கள் குடும்பத்தை இனிப் பாதுகாப்பேன். புலவர்கள் கவலை இன்றி இருந்தால்தான் கலை வளரும்," என்று பெரும் பொருள் கொடுத்து, "நீங்கள் தமிழில் ஒரு நூலியற்றுங்கள்," என்றார். அவ்வாறே ஆசுகவிராசர் காளத்திநாதர் கட்டளைக் கலித்துறை என்னும் சிறந்த நூலியற்றி, அதிவீரராமரை மகிழ்வித்தார்.

ஐயம்பெருமாள் சிறந்த கவிராசர், அதிவீரராம பாண்டியரால் ஆதரிக்கப்பட்டார். கவிராசர் முத்தமிழிலும் வல்லவர். அவர் பாண்டியரின் வேண்டுகோளாற் புரூரவ சரிதை இயற்றிப் பாண்டியரது அவையில் அரங் கேற்றினார். பாண்டியர் கவிராசர்க்குப் பெரும்பரிசில் கொடுத்து மகிழ்ந்தார். பண்டிதர் இராமகிருஷ்ணர்,

புலவர் சிதம்பரநாதர் முதலிய புலவர்களும் அதிவீர ராமரால் ஆதரிக்கப்பட்டார்கள். அவர்களுடைய புகழ் மாலையைப் பெற்ருர் அதிவீரராமர்.

## சிவப்பணி

அவரது உள்ளத்தில் பொங்கிய தமிழ்க்கடல் ஒருவாறு அமைதி பெற்றது. "நான் என்னுலியன்ற சிறு தொண்டு செய்தேன் தமிழ்த்தாய்க்கு; சிவப்பணி சிறிதும் செய்யவில்லை," என்று அவரது சிந்தனை சென்றது. அவர் தென்காசியில் ஒப்பற்ற சிவன்கோவில் ஒன்று கட்டினுர். அவர் தமது அரண்மனையைச் செங்கல்லால் கட்டிக் கொண்டார்; "அழியாத பரம்பொருளுக்குக் கட்டும் கோயில் அழியாமல் இருக்கவேண்டும்" என்று கோயிலைக் கருங்கல்லால் கட்டினுர். அவரது தூய புகழ்போல் அக் கோயில் இன்றும் காட்சி அளிக்கின்றது.

கோயிலுக்கருகில் குளமும் கிணறும் தோண்டிக் கோயிலைச் சுற்றிலும் உயர்ந்த மதிலெழுப்பினுர்; பூஞ்சோலையும் அமைத்தார். அச்சோலையின் மரங்கள் கோபுரத்தின் மீதும்விமானத்தின் மீதும் மலர்களைச்சொரிந்து இறைவரை வணங்கும். பெண் வண்டுகள், தெய்வத் தேவாரம் பாடும். ஆண் வண்டுகளோ, அப்பாடலைக் கேட்டு மகிழ்ந்து உலாவும். அக்கோயிலில் சிற்பங்கள் மிக அழகாய் அமைந்துள்ளன. அவற்றின் முகங்களில் தெய்வக்களை வழிகின்றது. கருங்கல்லிலே மிக நுண்ணி தாக அமைந்திருக்கும் வேலைப்பாடு, கண்டோரை

அதிசயிக்கச் செய்கின்றது. அவற்றை அமைத்த சிற்பி களுக்கு உயிர்கொடுக்கும் சக்தி ஒன்றுமட்டும் இல்லாமற் போயிற்று.

அதிவீரராமர் தாம் கட்டிய சிவன் கோயிலைக் கண் குளிரக் கண்டார்; இறைவர் திருவருளைப் போற்றி உருகினார்; 'பிறவி எடுத்ததன் பயனாகச் சிறிது தமிழ்ப் பணியும் சிவப்பணியும் செய்தேன்!' என்று மகிழ்ந்தார்; இறைவர்க்குப் பூசையும் திருவிழாவும் என்றும் நடக்கப் பல கிராமங்களைச் சருவமானியாக வரி கழித்துச் செப் பேட்டில் எழுதிக்கொடுத்தார்.

தமிழ்ப்பணி சிவப்பணிகள் செய்தும் அவர் மனத்தில் ஒரு குறை முளைத்தது. அது திருமாலுக்குச் சிறு தொண்டும் செய்யவில்லை என்பது. சிவன் கோயிலைப் போலவே சிறப்பாகத் திருமால் கோயிலை அதிவீரராம பாண்டியர் தென்காசியில் கட்டினார்; அதனைக் கண்டு கண்டு, உருகி உருகி மகிழ்ந்தார்; அதற்கும் சருவமானிய மாகப் பல கிராமங்களைச் செப்பேட்டில் எழுதிக் கொடுத்தார்.

அவர் செய்த ஆட்சியால் நீதி வளர்ந்தது; குடிகள் மகிழ்ந்தார்கள். அவர் செய்த தமிழ்ப்பணியால் தமிழ் வளர்ந்தது; தமிழ்ப் புலவர் வளர்ந்தனர்; அவர் கட்டிய கோயில்களால் மக்களுக்குப் பக்தி மிகுந்தது; சிற்பக் கலை வளர்ந்தது; தொழிலாளர் பிழைத்தனர். பொதுவாக நாட்டில் இன்பம் வளர்ந்தது என்று சொல்லலாம்.